யாற்றிடையியக்கவென் றுமடையினையடையுமாங்கே *
பாத்திரமீந்தானேறி யந்த சிவபுரப்பாரம்பற்றும் *
பாத்திரமல்லான்கட்டியிரும்பெனப்பாரம்பற்றான் *

எ-து யாதாமொருவரிருப்புக் கட்டியைத்தோணியாகப்பண்ணியதிலேபல பண்டமுமேற்றியாற்றின்கண்விடும் போதுதாமெண்ணியகரையினைச்சேரும். அப் படியேசத்பாத்திரமானதும், தன்பாற்றானஞ் செய்தோனையுங்கொண்டு சிவபுரமா கியகரையைச்சேரும், கட்டியாயுள்ளவிரும் புடன்பண்டத்தையுங்கட்டியாற்றின் கண்விடில்விட்டவெல்லையிலேயமிழ்ந்திக் கரையடையமாட்டாதவாறுபோல, அச த்பாத்திரமானவனுந், தன்பாற்றானஞ்செய்தோனைக்கரையடைவிக்கமாட்டாதது மன்றித்தானுஞ் சிவபுரமாகியகரையடையமாட்டான் எ-று
அடை - எ-து - கரை [௩௫]

பாத்திரம்அபாத்திரமானவிருவருஞ்சரியாயிருக்கவதிலொருவர்க் கொருவருயர்ச்சிதாழ்ச்சியுமாய்நன்மைதீமையைத்தருமாறென் னையெனவினவ, அதற்குவிடையுணர்த்துகின்றார்.

கட்டியைக்கனலிற்காய்ச்சிக்கம்மியனலகுமாக்க *
விட்டநற்பண்டமேற்றப்புனன்மிசையியங்குமெற்றே *
யொட்டியகுரவனோதுமொருபொருளுணர்ந்தாரற்றே *
கட்டியைக்கடுப்பர்காட்டுங்கடவுளையுணராக்கையர் *

எ-து கொல்லனானவனிருப்புக்கட்டியையக்கினியிலேகாய்ச்சித்தோணியா கச்செய்யவதுதன்கணிட்ட நல்லபண்டங்களையுந்தரித்துக்கொண்டு நீரின்மேலே யோடுமதேதன்மைத்துச்சிவனோடேயேகீபாவம்பொருந்திய வாசாரியன்றீக்ஷா சுத்தருக்குபதேசித்த வொப்பிலாதசிவத்தை யுணர்ந்தஞானவான்கள், தமக்கீந் தோனைப்பிறவிக்கடலினின்றுங் கரையையடைவிப்பதத்தன்மைத்தாம், ஆசாரிய ராலேயெப்பொருளையுங்காட்டுஞ்சிவனையுணராத, அஞ்ஞானிகள், பணிப்படாத விருப்புக்கட்டியையொப்பர் எ-று [௩௬]

மேலுமோர்வகையாற்பாத்திரமென்பானையுணர்த்துகின்றார்.

பாத்திராபாத்திரத்தைப்பகாதுருகுதலேபற்றிக் *
கூர்த்தவாதரவினாலேகொடுப்பவர்க்கவர்கடாமும் *
பாத்திரங்குருடர்பங்குபாலகர்பிடியர்நோயர் *

முத்தவர்திருபணந்தியவர்களுமிரக்கமுற்றில் ✻

எ - று இவர்பாத்திரம், இவர், அபாத்திரம், என்றிரட்டுறக்கருதாதுள்ள நெகிழ்ச்சிபொருந்தியிருந்தவாதரவுண்டாகவனையாதுகொடுப்போர்க்கியாவரிடத்திலுமிரக்கமேலிடின், முற்கூறியவசத்பாத்திரங்களுங் குருடர், முடவர் சிறுகுழந்தைகள், தரித்திரர், வியாதியாளர், வயோதிகர், பேராசையுடையோர், முதலானவின்னோர்களும்பாத்திரமேயாம் எ - று [௩௭]

இதுவுமது

உச்சியிலிலைவாயில்லா முத்தமொன்றேயெண்ணி ✻
யார்ச்சனைபுரிகவன்பாலவலனூணுக்கைதன்னைக் ✻
கைச்சமலேசன்வாழுங்கடிநகரடைவாமென்று ✻
பிச்சைநாயினியையுந்தாமொல்லாமெண்ணியயாவுமேயும் ✻

எ - று துக்கத்தை விளைக்கும்பொல்லாதவுடம்பினைவெறுத்து நின்மலனாகியசிவனொழுந்தருளியிருக்குஞ் சிறப்பினையுடைய சிவலோகத்தை யடைவோமென்றுகருதுமாசையினோடேபொருந்தினோரொல்லோரும் உச்சிக்காலத்திலேபசித்துவந்தோரியாவரையும் பாத்திரங்களென்றேகருதி யவர்களையன்பினாலே யருச்சனைசெய்தன்னமுதலியகொடுக்கக்கடவர்அங்ஙனஞ்செய்யிற்றம்மனத்தின்கணினைத்தபலன்களெல்லாங்கைகூடும் எ - று [௩௮]

தாதாவினதிலக்கணமுணர்த்துகின்றார்

பாத்திரமல்லார்செய்கையதனையும்பகர்ந்தாம்பண்பு ✻
வாய்ந்ததாதாக்களாவார்தகைமையும்வகுத்துச்சொல்வா ✻
மோர்த்துணர்தாரந்தாழ்ச்சியுறவனுகம்பங்கோபந் ✻
தீர்த்திடலென்னுமைந்துமுடையரேசிறந்தார்தேரில் ✻

எ - து வாராய் முனிவரனே யசத்பாத்திரமானோரிலக்கணத்தையுஞ் சொன்னோம்மேல்நற்குணம்பொருந்தியதாதாக்கள் மேன்மையும்பிரித்துச்சொல்லாநின்றோமதனையாராய்ந்தறியக்கடவை யங்ஙனமவர்கள்முறைமையை யாராயிற்கொடைவணக்கமுறவுகிருபைபொறையென்றுசொல்லுமிந்த ஐந்துகுணமுமுடையார்களேதாதாக்களாவர் எ - று [௩௯]

சிவஞானிக்கியுந்தன்மையுணர்த்துகிறார்

பாத்திரமதனுக்கப்பாற்பாத்திரம்பரமஞானி ❋
நீத்தவாசையினாலியாவனவனிரப்பானன்றே ❋
சார்த்துதாதாவினையிலவன்புடைசென்றுகொள்ளவி ❋
தீர்த்தனேயென்றுரைப்பான்பலந்தினைத்திதிக்கலாமே ❋

எ - து பாத்திரமாவனவற்றுள்விசிட்டமான பாத்திரஞ் சிவஞானியேயாமவன் பொருள்களினுள்ளவாசையொழிந்தபடியினாலே யாதாமொருவர்பாற்சென்றிந்தப்பொருளையெனக்கீயக்கடவையென்று சொல்லானாதலால் அன்மைமேம்பமுடையசிரத்தையினாலேயந்தச்சிவஞானியெழுந்தருளியிருக்குமெல்லையிலேசென்று சுத்தனேயடியேன்றரும்பொருளைநீகொள்ளக்கடவையென்றுசொல்லியுங்கொடுக்குந்தாதாவின்பலத்தையளவிடலாமோ எ - று [சய]

மெய்ஞ்ஞானியுமஞ்ஞானியுமேற்குங்கிரமதனால் வரும்பயனும்பயனின்மையுமுணர்த்துகின்றார்

மெய்யினையுணர்ந்தஞானி வேணவாவிடுத்தானேனு ❋
முய்யவேபிறருமென்னியவர்கொடையுகப்பனேனோர்க் ❋
கையர்கடம்மைத்தாமேகாதலித்திரப்பரந்தப் ❋
பொய்யர்கைப்புகுத்தினோர்கள்பொருளினையிழந்தார்போட்டே ❋

எ - து உண்மையைத்தெரிசித்தசிவஞானியானவன், பொருண்மேலுள்ளவாசையைவிட்டானாயினுந்தம்போலமற்றுள்ளவர்களும்பரகதியடையவேண்டுமென்று கருதியந்தத்தாதாக்கள் செய்யுந்தானத்தைவிரும்பிக்கொள்வன் அந்தவுண்மையைத்தெரிசியாத அஞ்ஞானிகள், தாதாவானவன்கதியடையவேணுமென்றுவிரும்பாது தம்முடையபோசனார்த்தத்தைவிரும்பித்தானத்தையேற்பாராதலால், அஞ்ஞானிகள்கையிலேதானஞ்செய்தோர்கள்தம்பொருளினையவமேபோட்டிழந்தவராவர் எ-று தாம் - எ-து - அசைநிலை [சக]

தாதாவானவன்சுவர்க்கமடைதற்கின்னோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்.

காதலித்திவர்வானைக்கலப்பதுமவர்கைகாட்டு ❋
மாதலால்வானஞ்சேரவாதரவுடையாரஞ்சிப் ❋
பாதபூசனையும்பண்ணிப்பகர்ந்துசற்காரபாடை ❋
யோதனமாதியீகவதிதிகட்குறவிதேடே ❋

எ - று அறத்தைவிரும்பித்தானஞ்செய்வோர், சுவர்க்கத்தையடையுமுறைமை யைக்காண்பதெங்ஙனமென்னில் அவர்கொடுக்குங்காலத்துமேலாகச்செல்லுங் கைத்தாரையானதவர்சுவர்க்கத்தின்மேற்செல்லுமுறைமையைக்காட்டும் ஆகையினாலே சுவர்க்கத்தையடையவேண்டுமென்னும் விருப்பத்தையுடையோரிரப்போரான்றிக ழாமலதிதிகளுக்குப்பயந்துபாதார்ச்சனையுஞ்செய்து நல்வார்த்தையுஞ்சொல்லிய ன்னமுதலானவற்றையன்பினோடேகொடுக்கக்கடவர் - எ-று [௬௨]

தரித்திரற்குக்கொடாதான்சிறப்புடையனல்லனென்றுணர்த்துகின்றார்

செறிந்துதாவென்றுநின்றமிடியனைச்சிறியனாக்கி ❋
யுறைந்துளான்பெரியனெங்ஙனென்றுளத்தாகந்துசெய்வான் ❋
சிறந்ததாதாவேயல்லன்செட்டியன்செய்கையெல்லா ❋
மறந்திடுந்தநமேற்றாமிடியருமின்மேலெங்கும் ❋

எ - து தன்னைக்கிட்டியெனக்கியக்கடவையென்றுசொல்லியிழிவரவினோ டுநிற்குந்தரித்திரனை, யிவனற்பனென்றெண்ணிச்செல்வத்தையுடையபெரியவனெ ங்கேயிருக்கின்றானென்றுகருதியவற்குக்கொடுத்தற்குத்தன்னுள்ளத்தின் கண்விசா ரிப்போன், அருளான்மிக்கதாதாவாகான், இவன்கொடுக்குங்கொடையெல்லாம், அவன்பாற்றனக்குமோருதியங்கருதியசெட்டாம், இங்ஙனஞ்செல்வரையிகழ்ந்து மிடியரைச்சிறப்பித்ததென்னெனில், எங்குஞ்சென்றிரக்குமிடியருமில்லையாயின் ஏற்பாரற்றுத்தன்மமானதுலகின்கண் லாதுநாசமாமாதலாற்றரித்திரற்கேதான ஞ்செய்யக்கடவன் எ-று [௬௩]

அதற்குமேலுமோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்.

பொருளிதாகிற்கேட்பார்க்கின்சொலுமரிதோபோந்தால் ❋
விரைவுடனெழுகைபோடல்வியந்தெதிர்கொள்கைபீடத் ❋
தரிமையிலிருத்தல்பாதபூசனையுகப்புச்செய்கை ❋
பிரிபொழுதுடனேசெல்கையெனுமிவையேழும்பேறே ❋

எ - து தன்பால்வந்துகேட்குமிரப்போர்க்குக்கொடுக்கும்பொருளில்லையா யினவர்க்குச்சொல்லுநல்லவார்த்தையுமில்லாததோ ஆதலால்நல்வார்த்தையாயி னுஞ்சொல்லக்கடவன், தன்பாற்பெரியோர்கள்வந்தகாலத்துவிரைவினோடெழுந் திருக்கை; யோடிச்செல்லல்கண்டவுடனெழுந்தருளப்பெற்றதேயெனக்கொண் டாடியெதிர்கொள்கை, அவரிருக்குமதற்குரிமையுடையவாதனத் திருத்தல், பாத

த்திலருச்சிக்கை, இன்றல்லவோவெனதுகிரகற், சுத்தமாயிற்றென்றவனையுயர்த்திப்புகழ்தல், அவர்களெழுந்தருளும்பொழுதுபதினறடிமுன்சென்றுவழிவிடுக்கை, யெனக்கூறுமிவைகளேமுழுத்தியடைதற்குக்காரணமாம் — எ-று

ஒகாரம் - ஒழியிசைக்கண்வந்தது, போந்தாலென்னும் வினைக்கு முடிபெய்வித்திரிக்க. [௪௪]

தாதாவுமவன்கையிலேற்றுனுமடையும்பலமுணர்த்துகின்றார்.

இரக்கமாதரவுகூரவிபவன்கையிலேற்று ※
விருப்பனேயிந்தாதேடுபிரசனதுலகமெய்தி ※
யிரக்கமாதரவிலான் கையேற்றவனிந்தாதேடு ※
மிருப்பனேநிரையந்தன்னுளெண்ணிமுன்வினையையெய்தி ※

எ-து அருளுமாதரவும்பெருகக்கொடுக்குந் தாதாவின்கையிலேற்றவன் அந்தத்தாதாவினோடுஞ் சிவலோகத்திலேசென்றிருப்பன்அருளுமாதரவுமில்லாத தாதாவின்கையிலேயேற்றவன், அந்தத்தாதாவினோடு நிரையத்துள்சென்று முன்செய்தபாவத்தைவிசாரித்துவாடியிருப்பன் - எ-று [௪௫]

மேற்புண்ணியதலங்களையெடுத்தெழுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு.

கொடுக்குஞ்செய்கையார்தம்மையுங்கூறினம் ※
விடுக்குஞ்செய்கையார்தம்மையும்வெண்ணிற ※
விடைக்கும்பாகன்விமலன்விரும்பிய ※
விடத்தையுமிசைப்பாமினியாமரோ ※

எ-து தாதாக்கள்முறைமையும் அதாதாக்கள்முறைமையும் வகுத்துச்சொன்னேம்மேல்வெள்ளைநிறத்தையுடைய விடபத்தைச்செலுத்துவோனுமாய் நின்மலனுமானசிவனேவிரும்பியெழுந்தருளியிருக்கும் புண்ணியதலங்களையுந் தொகுத்துயாம்சொல்லாநின்றோம் எ-று

விடைக்குப்பாகனென்பதனைவிடைக்கும் பாகனெனல்மெலிக்கும் வழிமெலித்தல் அரோ அசை [௪௬]

வேறு

தீர்த்தமார்சிவகாசிதிகழ்குருக் ※

எழிலுமார்பரங்குன்றிராமீச்சுரம் *
பொழிலுமார்மதுராபுரிபூவணம் *
அழகுமாருநெல்வேலியஞ்சைக்களங் *
குழகன்புக்கொளியூர்கொலிக்குன்றமே *

எ - து வெளி (௫௨)

கோதனங்கள்குவிந்தவிடங்களு *
மாதபோதனர்வாழுமடங்களு *
நீதில்வேட்கையர்க்கேய்விடமின்னுமுன் *
னோதுவாங்காலபேதமுமோர்கவே *

எ - து இங்ஙனங்கூறியபுண்ணியதலங்களும்-பசுக்கள்திரண்டவெல்லைகளும் தபோதனர்களெழுந்தருளியிருக்குந்திருமடங்களும்-மிதுபோலத்தானஞ்செய்கிறதி லேவிருப்பத்தையுடையோர்க்குப் பலனதிகமாதற்குப் பொருந்தியதலங்களின்ன முமுளதாம்.முறைமையானேயினிக்காலபேதங் களையுஞ்சொல்லாநின்றோமவைக ளையறிவாயாக எ - று (௫௩)

காலவிசிட்டமுணர்த்துகின்றார்.

அரவமாதித்தன்றன்னையடர்ந்திட *
விரவும்வேலையும்வெண்மதிதன்னையு *
மிருமையானவயனமும்விபவர்க் *
குரியவேலைகண்மற்றுமுண்டோர்கவே *

எ - து வெளி—இருமையானவயனம் - தைமாதப்பிறப்பு-ஆடிமாதப்பிறப் புமற்றுமுண்டென்பதனால் - சித்திரைவிசு - ஐப்பசிவிசு - அமாவாசி - பூரணை - திருவாதிரை -விதிபாதயோகமுதலாயினவென்க (௫௪)

ஆதரவின்விசிட்டமுணர்த்துகிறார்.

உரைத்தனங்காலபேதமுமோர்கவுட் *
சிரத்தைதன்னையுஞ்செப்புவஞ்சிந்தையுட் *
பரித்தமெய்மைப்புரமப்பிரீதியே *
குருத்தபத்தியுமற்றதன்கூற்றரோ *

எ - து இங்ஙனங்காலவிதங்களுஞ்சொன்றோமேலுள்ளத்தின்கணுளவான வாதரவையும் - அதன்பரியாயத்தையுஞ் - சொல்லாநின்றோமதனையறிவாயாக ஆதரவானது - தம்முள்ளத்தின்கணுண்மையோடுகூடினமேலானமகிழ்ச்சியெனவும் - பெருந்தவன்பு - எனவுமற்றமுளபரியாயப்பெயரினையும்பெறும்- எ - று மற்றென்பதுசுட்டியதற்கினமென்பதனுலதற்கினமாகியசிவதன்மம்பாவமாதியென்னுமூன்றுமந்தவாதரவுக்குப்பரியாயப்பெயரெனவறிக அரோ - அசை - [௫௫]

மேன்முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

சிறந்ததேசமுங்காலமுஞ்சிந்தையுட் *
பிறந்தகாதலும்பெற்றவர்நற்றவர்க் *
கறைந்தநூல்விதியர்ச்சனையாக்குக *
நிறைந்துவானெனவேபலநீடுமே *

எ - து உத்தமமாகியகாசிமுதலியதேசமுங்-கிரகணங்கண்முதலியபுண்ணியகாலமு - முள்ளத் தின்கட்பொருந் தியமகிழ்ச் சிமுதலானவாதரவும் - எய்தப்பெற்றோர்நல்லதவத்தினையுடையசத்பாத்திரங்களுக்குவேதாகமங்களிற்சொன்னவிதிப்படியேயர்ச்சனைசெய்துதானஞ்செய்யக்கடவர் - அங்ஙனமவர்களுக்குச்செய்ததானபலன்களாகாசம்போலவிசாலமாய்ப்பெருகியழியாமனிலைபெறும் எ - று [௫௬]

வேறு.

என்றுபயன்மேன்மைதருகாரணமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - து வெளி [௫௭]

சிவத்துதியுணர்த்துகின்றார்.

வானவர்நாடருமாதவனேமானவிருட்டறுமாதவனே *
கானமர்வேடனுமானவனேகடிதெனவேசெலுமானவனே *
யேனமுமானவனெண்ணலனேயெம்முளத்தாக்கிடுமெண்ணலனே *
யூனமர்வெண்டலையுண்டவனேயுத்தமர்நெஞ்சகத்துண்டவனே *

எ - து மாலயன்முதலாயுள்ளதேவர்கள் - அறிதற்கரியபெரியோனே, ஆன்மாக்களுக்கியானெனதென்னுமபிமானமாகியவகங்காரத்தையொழித்தற்குக்காரணமானஞானதித்தியனே, அருச்சுனனுக்கனுக்கிரகஞ்செய்தற்பொருட்டுக்காட்டின்கணுறையும்வேடுவனாய்வந்தோனே, விரைந்துசெல்லுமிடபத்தையுடையோனே, வராகரூபியுமானதிருமாலறியப்படாதோனே, யெம்முடையவுள்ளத்தின்கணுண்டாக்குமுழுதுணர்வுமுதலாகிய வெண்குணத்தையுமுடையோனே, குற்றம்பொருந்தியபிரமகபாலத்திற்பிச்சையேற்றுண்டோனேயுத்தமரானசிவஞானிகளுள்ளத்திலனவரதமும்விளங்காநின்றவனே - எ - று [ருஅ]

இதுவுமது

புலிமுனிபூசைபுரிந்தவனேபுகழ்நடமன்றுபுரிந்தவனே *
பலிதருவார்க்கிதபாடணனேபாங்கிலர்வாய்க்கிதபாடணனே *
பலவறப்போதகவாரியனேயவிர்சடைத்தாங்கியவாரியனே *
மலைசிலையாக்கியவன்மையனேவந்துமரிப்பனவன்மையனே *

எ - து வியாக்கிரபாதமகாவிருடிசெய்தபூசையைவிரும்பினோனே, யாவரும்புகழாநின்றதிருநடத்தைஞானாகாசத்தின்கட்செய்தோனே, தாருகாவனத்திற்பிச்சைகொண்டுவந்திடுமாதர்க்கின்சொலைச்சொல்லுவோனே, உரிமையில்லாத-அபக்குவரிடத்துச்சாருவாகமுதலியகொடுஞ்சொல்லைச்சொல்லுவோனே, பக்குவான்மாக்களுக்குப்பிறவித்துன்பங்கள்கெடவேதாகமங்களைப்போதிக்குஞானசாரியனே, யொளிவிடாநின்றசடாமகுடத்தின்கட்டரித்தபுனலையுடையோனே, மகமேருவைவில்லாக்கியவலியையுடையோனே, ஆன்மாக்களைப்போலுலகின்கட்பிறந்திறக்குந்தன்மையில்லாதோனே எ - று
கிதபாடணம் - தீயசொல் - இதுவடமொழி [ருகூ]

வேறு - குமரன்றுதியுணர்த்துகின்றார்.

நினைவார்வினைநனிபோயறுநிலநீள்கதிரவன்முற் *
பனிபோவதுமெனவேபசுபதியோதியபனுவன் *
முனிதான்வினவியநாணனிமொழிவாய்மையன்முனியா *
தெனையாளுடையறுமாமுகனெழிலாரடியிணையே *

எ - து பசுபதியாகியசிவனருளிச்செய்தவேதாகமங்களையகத்தியமுனிவன்வினவியகாலத்துமிகவுமுத்தரஞ்சொல்லுந்திருவாக்கினையுடையனும், அபராதி

எ - து வாராய்முனிவரின்மிக்கோனுனவகத்தியனே - யுள்ளத்தையீராகின்றவியாதியானதுசரீரத்தின்கட்பொருந்தி முயற்சியையுமொழித்துநிற்குமெறிவில்லாதோருந், தவவலிபொருந்தியென்னையடிமையாகவுடையசிவனுலகஞ்சிவலோகத்திற்சென்றுமகிழ்ச்சியோடிருக்கும் வண்ணஞ்சிவனருளிச்செய்த சிவதருமமெல்லாவற்றையு, மிகவுமையந்திரிவறமேற்சொல்லாநின்றேம், அதனைக்கேட்பாயாக - எ - று முனிவு - முயற்சி - யீடு - வலி (௧)

முற்கூறியசிவதருமம்நிலைநின்றுபகரிக்குமுறையுணர்த்துகின்றார்.

அற்புதனமலன்கூறுமறம்பலவாரிங்கிதாதி *
கற்பொடுங்கலந்துநாளுமபலத்தினைக்கருதுவார்க்குத் *
தற்பரனருளினாலேதருவனவனந்தகால *
நிற்பனதொன்றுதொட்டேயன்பனைநீங்காப்பாங்கால் *

எ - து கண்டோர்க்குஅதிசயத்தைவிளைப்பானாய்-நின்மலனாயிருக்கிற - சிவனருளிச்செய்தவறங்கள்பலவுமுளஅவற்றுட்கொல்லாமைமுதலியசிவதன்மங்கள்பத்தும் - எல்லாத்தன்மத்துக்குமேலாய்ச்செய்தோனைப்பற்றிநிற்குங்கற்பின்முன்மையோடும்பொருந்திச்சிவனருளினாலேநாளுவிதமானபலத்தைவிரும்பினோர்க்குவிரும்பினபடியேகொடுக்கும் - அஃதுமன்றித்தம்மையியற்றுமன்பனைநீங்காதவுரிமையினாலேபிரவாகரூபத்தியாகத்தொன்றுதொட்டெண்ணிறந்தகாலமழகுபெறநிலைபெற்றுநிற்புனவாம் எ - று (௨)

அர்தஅயிங்கிதாதியைவகுத்துணர்த்துகின்றார்.

அரிங்கிதைபொறையேமெய்ம்மையறைதலேயரியநாணே *
யுபார்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே *
வியந்தவர்ச்சனையேமெய்யூன்வெறுத்துறுதவமேமோனி *
நயந்தபாவனையேயென்னத்தசமிவைநன்றெந்நாளும் *

எ - து கொல்லாமையும்பொறையுஞ் - சத்தியவாக்கும் -பெறற்கரியநாணமாகியபழிபாவத்துக்கஞ்சுதலும் - புண்ணியங்களிலேமிகுந்த - ஆதரவும் - உள்ளமுதலியவற்றையொடுக்குமடக்கமுடைமையும் - கொடையும்-யாவரும்வியந்துசொல்லுஞ்சிவார்ச்சனையும் - ஊனிறைந்தசரீரத்தைவெறுத்துச்செய்யுந்தவமுஞ்-சதாசிவாதிவிக்கிரகங்களைவிரும்பினதியானமும் - ஆகத்தருமங்கள்பத்து - இந்தத்தருமங்கள் - எக்காலமுநன்மையைத்தருவனவாம் - எ - று (௩)

முற்கூறியவற்றுள் - தமக்கியன்றமரியாதிசெய்தோரும்அனைவருமுழு
தஞ்செய்தோரும்பெறும்பயனுணர்த்துகின்றார்.

இயன்றனவியற்றினாருமனைத்தையுமியற்றினாரும் ✽
பயன்பலசிவலோகத்திற்பற்றுவர்தத்தம்பாங்கா ✽
னயந்தவர்போகமங்குநண்ணுவர்திண்ணமண்ணைக் ✽
கயந்தவர்போகங்காட்டுங்கடவுளையடைவர்கண்டே ✽

எ - று — வெளி [ச]

முதற்றொகுத்தவற்றைச்சிறப்பித்துணர்த்துகின்றார்.

இன்பமேயங்குத்தங்கியிருப்பவர்தமக்குமெள்ளுந் ✽
துன்பமேதொடர்வதில்லைத்துளங்கிளம்பிறையுஞ்சூடி ✽
மின்பொலிசடையன்வேந்தன்விளைத்தநல்வினையாற்சேர்ந்த ✽
வன்பர்களவைரல்லார்தம்பலமருந்துவாரோ ✽

எ று அந்தச்சிவலோகத்தின் கட்போகத்தைப்பொசித்திருப்போர்க்கு மின்பமேயொழியவிகழுந்துன்பமானது தொடர்வதில்லை விளங்காநின்ற விளம்பிறையுமணியுமின்பொலிந்த சடாமகுடத்தையுடையகருத்தாவைத்தாம்செய்தநல்வினையினாலேயடைந்தமுத்தான்மாக்கள்கிருத்தியகருத்தாக்களாகார்கள்தமதுசிற்சத்தியின்பத்தையேநினைத்திருப்பர்கள் எ று

பிறையுமென்றவும்மையாற்கங்கையினையுமெனவறிக [ரு]

சிவபூசைக்குவிசேடவிதியுணர்த்துகின்றார்

முனிவரதருமபேதமொழிந்தனம்பலமுமுன்னி ✽
யினிவரமில்லாதாருமியற்றிடும்பூசையாவு ✽
முனையுணாசெய்வாமோர்நீயொளிர்சடைமுடியிலூரும் ✽
பனகமுமதியும்வைத்தபரனடிநினைந்துபாங்கால் ✽

எ. து வாராய்முனிவரனே கொல்லாமைமுதலியகருமங்களும்அவையிற்றின் பலத்தையுஞ்சொன்னோமேற்சிறப்பில்லாதாருஞ்செய்யும்பூசையுங்காலமுந் தேவயோனியட்டகத்திற்பெறும்பயனும் மிவையெல்லாமுனக்குவரையறைசெய்துசொல்லாநின்றோமவற்றைநீவிளங்காநின்றசடாமகுடத்திலே யூருந்தொழிலைச்செய்யும்பாம்பையுமிளம்பிறையையுங்கூடத்தரித்த சிவனது திருவடிமலரை நினைந்தொரு

ப்பாட்டினுடையறிவாயாக எ - று

உனையென்னுமையுருபுருவ்வுருபாய்மயங்கிற்று [௬]

குற்றத்தோடுகூடியொருநாண்முதலொன்பதுநாளிறுதியாகப் பூசை
செய்தோரைத்தற்சுத்திசெய்தாகப்பெறும் பயனை யொன்பது செய்யு
ளாலுணர்த்துகின்றார்

அழுக்கினையறுக்கவல்லரல்லராயாகந்தன்னி *
லிழுக்குடையவருமீசனிணையடிக்கொருநாளிட்ட *
பழுப்பிலைப்பாங்கினுமேலாம்பிறையபைசாசத்தை *
யழுக்குறுமன்வித்தைபுண்டிகளிப்புமைவுறுவரன்றே *

எ - து சரீரத்தினசுசியை நீராடன்முதலியவற்றாற் போக்கமாட்டாதவருமா யழுக்காடையுடுக்கு மவரானமலினர்களும் ஒருநாட்சிவனது திருவடியிலே யிலங் கட்கொம்பினுமுதிர்ந்த பழுப்பிலை கொண்டருச்சித்த நன்மையினாலே பைசாசத் தன்மையை யடைந் தாசினமாங்கிசங்களை யொசித்துள்ள மகிழ்ச்சி மேலிட்ட பை சாசபுவனத்தின்கணிருப்பரென்றவாறு

ஈண்டுக்கூறியபைசாசம்புத்தித்தத்துவத்திற்பைசாசயோனியெனவறிக உழு க்குமன் கழியுமனென்றுசொல்வாருமுளர் உள் எ - து இடம் [௭]

சினத்தினாற்சிவந்தகண்ணர்சிறப்புறுவினையுந்தீர்ந்த *
மனத்தினாரிரண்டுவாரமலர்சிவனடியின்வைக்கிற் *
றனக்கிணையில்லாதாருமவர்தமைச்சாரச்செய்வன் *
றனைத்தெழுமரக்கர்தொக்கபுரத்தினுட்டிளைக்கத்தோயார் *

எ - து கோபத்தினாலே சிவந்தவிழியினையுடையோராய்விசிட்டமானநல்வி னையுஞ்செய்யாதமனத்தையுடையோருமானவர்கள் - இரண்டுநாட்சிவனது தி ருவடியின்கண்மலர்களைக்கொண்டுபூசைசெய்யிற்றனக்குநிகரில்லாதசிவனும் - அ வர்களைவினைவினையூர்ந்துசஞ்சரிக்குமிராக்கதர்திரண்டிருந்தவுலகத்தின்கணிருக் கும்படிவைப்பன் - அவர்களொன்றுக்கும்பயப்படார்கள் — எ - று [௮]

சுயக்கவேதக்கலூனுங்கலந்துணுங்கடியர்தாமும் *
வியக்கவேதக்கவீசன்விரைமலரடியின்மீது *
பயக்கவேபலமூன்றுபகலருச்சனையைப்பண்ணி *

வியக்கார் தமுலகந்தன் னிலிருந் துவனவனையெல்லாம் *

எ - து வெறுக்கத்தக்கபுலாலையுமடிசிலோடுகூட்டி நுகருந்தீயோர்களுங், கண்டோராலதிசயிக்கத்தக்கசிவனதுநறுநாற்றத்தையுடையதாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத்தின்கண்மேன்மைதரும்படிமாங்கனிமுதலிய கனிகளைக்கொண்டுமூன்று நாட்பூசைசெய்யிலச்சிவனவர்களையெல்லாமியக்கருலகத்தின் கணிருக்கும்படிசெய்வன் — எ - று

உம்மையிழிவின்கண்வந்தது, ஏகாரங்கள் - அசைநிலை [௯]

காமரங்கற்றுரல்லர்பரகதமுங்களிப்புக்கூரத் *
தாமரன் முன்னேநின்றுதட்டமுமிட்டுக்கையாற் *
பாமரபறியாரேனும்பாட்டொருநான்குபாடி *
லேமமுமிசையவாழ்வர்காந்திருவத்தைதீயுமதே *

எ - து கானவித்தையும்பரதநூல்விதியாற்செய்யுங்கூத்தும்ப யின் றறியாதவர்களும், நாலுநாட்பூசைசெய்துசிவசன்னிதியிலே நின்றுள்ளக்களிப்புமிகக் கூத்துமாடிக்கையாற்கொட்டுதலுஞ்செய்து கீதத்தையும்பாடுவரெனில், அவர்கள்காந்திருவபுவனத்தையடைந்தின்புறுவாரகளா — எ - று

நாள் - நான்கென்றது - எண்ணிகர்ப்பட்டமையாலொருவிருத்தம் [10]

இவர்சிவபூசைபண்ணுமியல்பினரொன்றுமைமைப் *
புவிதலம்புகழவேண்டிப்பூசனைபுரிந்தார்தாமும் *
அவனரனடியிலஞ்சுதினமளவலரிறைஞ்சி *
ஃ திவிதலபோகம்பதந்தோப்பரிந்திரனைச்சோந்தே *

எ - து இவர்சிவபூசைசெய்யும்பெருமையையுடையோரொன்றுதம்மைமைப் பூதலத்துள்ளோர்கொண்டாடவேண்டியந்தச்சிவனதுதிருவடிகளிலேயஞ்சுநாட் பூமுதலியவற்றினாலேபூசைசெய்தோர்களும், ஃ அயிந்திரபுவனத்தைச்சேர்ந்து சுவர்க்கத்திலுள்ளபோகவிதங்களையனுபவிப்பர் — எ - று

உம்மையிழிவுசிறப்பு [௰௧]

---

ஃ திவி - சுவர்க்கலோகம் ஃ அயிந்திரம் - இந்திரசம்பந்தம்

அரிவையர்போகந்தன்னிலாதரவுடையராகிப் *
பரமனைப்பரிவாற்பூசையாறுதினம்பண்ணினோரும் *
விரவியசோமலோகம்வேண்டியபடியேபோய்த்தாங்கண் *
முருகவிழ் குழலார்தம்மையின்புறமுயங்குவாரே *

எ - று மடவார்களோடுகூடியநுபவிக்கும்போகத்திலேயாசையுடையராய் மேலானசிவனையாறுநாள் அன்பினோடேபூசைசெய்தோருஞ், சோமசம்பந்தமான சௌமியபுவனத்தையடைந்துதாங்கள்விரும்பியபடியேமணம்விரியாநின்ற அளகத்தையுடையமடவார்களையின்பமுறும்படி கூடியாண்டநுபவித்திருப்பர் எ - று [௰௨]

விழைவினராகிப்போகவிதந்தனில்விமலன்றன்னை *
யெழுதினமருச்சித்தாரு மிருப்பர்கள்விருப்பமெய்தி *
வழுவறுபோகபேத மருவிடவொருவலின்றி *
பிழையறுபிரசைவேந்தன் பெரும்பதந்தனைப்பெற்றே *

எ - று பலவிதமானபோகங்களிலே விருப்பத்தையுடையராய் மலரகிதஞான சிவனையேழுநாட் பூசைபண்ணினோருங் குற்றமற்ற ✠ பிராகேசுரமென்னும் பெரியபுவனத்தையடைந்து நல்லபோகவிதங்களுண்டாக விருப்பத்தோடுபொருந்தியதனை நீங்காதிருப்பர் எ - று (௰௩)

இருந்தியவேதகாயத் திரியினாற்றினமோரெட்டும் *
அரன்பதமருச்சித்தாரு மலரினாலார்வங்கூரப் *
பொருந்தியேபிரமலோகம் போகபேதங்களெல்லாம் *
அருந்தியேயிருப்பார்தங்க ளாசையுமகலவாங்கே *

எ - று வேதகாயத்திரியினாலும் பூக்களாலும் சிவனது திருவடியையெட்டுநாளருச்சித்தோர்களும் ஆசைபெருகப் ✠ பிராமிய புவனத்தை யடைந்து ஆங்குள்ளபோகபேதங்களெல்லாந் தங்களிடத்துண்டாகியவாசைதீரப் பொசித்திருப்பர்கள் எ - று

ஏகாரங்கள் அசைநிலை இவ்வெட்டும்புத்திதத்துவத்திற் புண்ணியாட்டகமென

---

✠ பிராகேசுரம் பிரசாபதியுலகு ✠ பிராமியம் பிரமலோகம்

வறிக (௰௪)

ஒருவனேழுவவொன்று மொன்பதுதினமுமன்பாற் *
பரமனையருச்சித்தாரும் பாம்பணைப்பள்ளிவள்ளல் *
புரமதுபொருந்திவாழ்வர் போகபேதங்கள்பொங்க *
வரியனபாவுமில்லை யவர்தமக்கமலனாலே *

எ - து மால்பிரமரைப்பசுவர்க்கமென்று பிரியாது பதியாகியசிவனோடு கூட்டி மும்மூர்த்திகளையுமொருகடவுளென்று சமபுத்திபண்ணிமேலாய சிவனை யுள்ளன்பினாலே யொன்பதுநாளருச்சனைசெய்வராயின் அவர்கள் நின்மலனாகிய சிவனருளினாலே யரவணையிலேதுயிலுந் திருமாலினது குணதத்துவத்தில் வைகுண்டபுவனத்தையடைந்தாங்குள்ள போகவிதங்கள்பெருகஅவைகளைநுகர்ந்துவாழ்வர்கள், அவ்விடத்தவர்களுக்குப்பெறற் கரியபொருள்களொன்று மில்லை எ - று

இச்செய்யுளளவுங்குற்றத்தோடு கூடிச்செய்தார் பூசையின்பயனுணர்த்தியவாறுகண்டுகொள்க (௰௫)

மேற்குற்றமறப்பூசைசெய்தோர்க்கேசிவலோகமெய்துமென்பதுணர்த்துகின்றார்

செப்பியவிதற்குமீது சிவபுரமதனைச்சேர்வர் *
ஒப்பிலாவொருவன்றன்னை யொருமையவுணர்ச்சிகூரத் *
தப்பறப்புரிந்தபூசைத் தபோதனர்தாமுமாங்கண் *
எப்பயனரியதாக வியம்புவதெளியதேதும் *

எ - து இங்ஙனங்கூறியவைகுண்டபுவனத்துக்கு மேலேசிவபுரம்விளங்காநிற்கும், அந்தச்சிவலோகத்தை ச்சிவனே கடவுளென்றொருமைப்பாடுபொருந்தியவறிவுமேலிடத்தனக்குநிகரில்லாத சிவனைநூனாதிகமற வருச்சனைசெய்யுந் தவத்தையுடையோர்களேயடைவர், அவர்களுக்கவ்விடத்திலெந்தப்போகந்தான்பெறற்கரியதாகச்சொல்லுவோமாதலாலெல்லாப்போகமுமெளிதாகவேவரும் எ - று (௰௬)

அந்தச்சிவலோகத்தின்சிறப்புணர்த்துகின்றார்

தினகரருதையகோடி தேசெனத்திகழ்ந்ததேர்கள் *
இனையவென்றளக்குமெண்ணை யிகழ்ந்தெழிலிசையநிற்கும் *
மனநினைவதனில்வேண்டு மகிழ்ச்சியும்வாய்க்கச்செய்யுந் *
தனைநிகரில்லிதங்கும் புரிவளஞ்சாற்றலாமே *

எ - து கோடிசூரியருதையஞ்செய்த பிரகாசம்போலவிளங்காநின்றவிமானங் களிவ்வளவென்றளவிடுமளவைக்கடந்தழகு பொருந்தவெங்குநெருங்கி நிற்குஞ்சி வபுரமானது அவ்விடத்திருப்போர்தங்கண்மனநினைவின் கண்விரும்பியசுகபோக ங்களையும் வாய்க்கும்வண்ண முண்டாக்கு மாகையினாலே தனக்குநிகரில்லாதசிவ னெழுந்தருளியிருக்குஞ்சிவபுரத்தின்வளப்பத்தையொருவராலு மளவிட்டுச்சொ ல்லப்படாது எ - று ஏகாரம் எதிர்மறை (௰எ)

சிவனெழுந்தருளியிருக்குந்திருப்பதியின் மரித்தவான்மவர்க்கங்க ள்சிவலோகமடையுமென்றும் சிவனையன்போடுகூடி ப்பூசை செய் தோர்சிவலோகமடைவது சொல்லவேண்டாமே யென்பதுணர்த் துகின்றார்

தெரிப்பருந்தேவதேவன் றிருப்பதிவட்டந்தன்னின் ☼
மரித்திடுஞ்சராசரங்கள் சிவபுரமதனுள்வாழு ☼
மருச்சனைபுரிந்தமற்றை யன்பர்களடைந்துவாழ்கை ☼
தெரித்திடவேண்டுமேயோ தெருண்டநற்சிந்தையார்க்கே ☼

எ - து வெளி (௰அ)

கண்டுபாவித்துப்பூசைசெய்தோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

உண்டொரொண்பொருளென்றுள்ள த்தோர்கிலார்தாழுமோர்ந்து ☼
பண்டிதர்பணியக்கண்டு பணிந்திடிற்பரமவென்னிற் ☼
றண்டரளங்கள்போலுந் தாரகாதேசந்தன்னில் ☼
ஞண்டிகழ்நரலேழ்கோடி யிரதபேதத்துளேய்வார் ☼

எ - து சடசித்துக்களெல்லாவற்றினையு மாளுமொரு ஒள்ளிய கடவுளுண்டெ ன்றுதம்முள்ளத்தின்கண்ணறியாதமூடரும் அந்தப்பொருளை யுண்டென்றுணர்ந் தஞானாசாரியர்வணங்கக்கண்டுதாமும்வணங்கினும் பரமவென்றுதுதிப்பினும் அவர் கள்குளிர்மையுடைய முத்துக்கள் போலுமொளியினையுடைய நக்ஷத்திர பதத்தி லே எண்டொகைவிளங்காநின்றவிருபத்தெட்டுக்கோடி விமானங்கள்சூழவதனடு வேபொருந்திவாழ்வர் எ - று (௰௯)

சிவதன்மங்களைத்தமக்கியன்றமட்டியாதிசெய்தோர்பெறும்பயனுண ர்த்துகின்றார்

இயன்றன வியற்றினோரு மற்றையபுரத்திலெய்ந்து ✽
பயன்றனைப்பயின்றுமீண்டு பாரிடைப்பிறந்துபாங்கான் ✽
முயன்றருந்தவத்தைமூவா முதல்வனையகத்துண்முன்னி ✽
யயன்றனைப்பயந்தவாதி யரன்புரியடைவரன்றே ✽

எ - று. தமக்கியன்றமரியாதிசிவதன்மங்களைச் செய்தோர்களும் வைகுண்டம் முதலியகீழுள்ளபதங்களிற் போகத்தைக்கிரமத்திலே பொருந்தி யங்கங்குள்ளது புசித்துத்தொலைந்தவாறே மீளவும்பூமியின்கண்வந்துபிறந்து முதிராமலென்று மொருதன்மையாயிருக்குஞ் சிவனையுள்ளத்துட் கருதிச்செயற்கரியதவத்தையொருமைப்பாட்டுடனேசெய்து பின்பு நான்முகனைப்படைத்தமுதல்வனாகியசிவனதுசிவலோகத்தையடைவர் எ - று. அன்றே எ - து அசை. (௨௰)

இங்ஙனங்கூறியசிவலோகத்தின் மேலுமூன்றுபுவனமுண்டென்று தொகுத்துணர்த்துகின்றார்

உரைத்தவிப்புரத்தின்மீதும் புரமொருமூன்றுண்டோர்க ✽
தரித்தவேற்குமரன்றங்குந் தானமொன்றதற்குமீது ✽
பரித்தபைங்கிள்ளைச்செங்கை ப்பாவைதன்பதியொன்றப்பாற் ✽
றெரிப்பருந்தேசாரீசன் சிவபுரஞ்செப்பாமொப்பே ✽

எ - று. முற்கூறியவிந்தச்சிவலோகத்தின் மேலுமூன்றுலோகமுளதாம் இதனை யறிவாயாக அஃதியாதெனிற் கையின்கண்வேலையேந்துங் குமரக்கடவுளெழுந்தருளியிருக்கும் புவனமொன்று, அதற்குமேலே பச்சைக்கிளியைச் சிவந்தகையிலேதாங்குமுமையினது புவனமொன்று அதற்குமேலே யளவிறந்த பிரகாசத்துடனேகூடியிருக்குஞ்சிவனதுமகாசிவலோகம், அதற்கிணையொன்றுமில்லாமையால் வேறொன்றையொப்புச்சொல்லோம் எ - று. (௨௧)

அவற்றுண்முற்கூறிய கந்தபுவனஞ் சத்திபுவன மிரண்டினையுமடைவாரின்னாரெனவிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

சத்தியைத்திரிசூலத்தைத் தரித்தபொற்கரத்தினானை ✽
வித்தகன்றன்னைப்பொன்னை யொத்தொளிர்மேனியானை ✽

மூத்தனை முளைத்தவாறு முகத்தனை முதல்வன்றன்னை ✲
மொய்த்தகண் மயிலின்மேலை முருகனை முன்னுவாரோ ✲

எ-து வெளி (௨௨)

இருப்பர்கள் குமரன்வாழு மெல்லையி லெல்லையில்லா ✲
விருப்புறப்போகமேதக மேவிடவிதற்குமீதே ✲
யிருப்பர்களுமையைத்தங்கள் கருத்தினுளிருத்தினோர்கள் ✲
பொருப்பெழுமருக்கர் கோடிநிறமெனப்புந்திசெய்தே ✲

எ-து முற்கூறியசிறப்பினையுடைய குமரக்கடவுளைத்தியானஞ்செய்வோர்அந் தக்குமரன்வாழும் புவனத்திலே சென்று தாங்கள்விரும்பிய படியே யளவிறந்த போகங்களெல்லாம்பொருந்த விருப்பார்கள் உமாபரமேசுவரியையுதையகிரியின் கண்ணுதிக்குங்கோடிசூரியப்பிரகாசம்போலத்தியானஞ்செய்து தம்முள்ளத்தின் கண்வைத்தோர்கள் அந்தக்கந்தலோகத்துக்கு மேலானஉமாபுவனத்தின்கணிருந் துவாழ்வர்கள் எ-று (௨௩)

மேனிறுத்தமுறையானே மகாசிவலோகத்தின் கணுறைவாரின்னா ரெனவுணர்த்துகின்றார்

தெளிபளிங்கனையமேனி திரிநயனங்கைத்தங்கு ✲
மொளிவளர்சூலமாலை யுதாரகைபயவங்கை ✲
நளிசடையுடையநாதனடியிணை யகத்துணர்ச்சி ✲
யுளினருமவனையொப்பச்சிவபுரத்துறைவருய்ந்தே ✲

எ-து அழுக்கற்றநின்மலமான படிகம்போன்ற திருமேனியையு மூன்றுதிரு நயனங்களையுமொளிவளராநின்றசூலமுஞ் செபமாலையும் பொருந்துமேலிற்கைக ளிரண்டினையும் வரதமும்அபயமும்பொருந்தியகீழிற்கைகளிரண்டினையு நெருங் கியசடாமகுடத்தினையு முடையசிவனது திருவடியிணையை யுள்ளத்தின்கண்விரும் பித்தியானிப்போரு மந்தச்சிவனுக்குநிகராகச் சாரூபம்பெற்றுமகிழ்ச்சியடைந்து மகாசிவலோகத்தின்கணிருப்பர் எ-று
உளினருமென்றவும்மையால்வணங்குவோருமெனவறிக (௨௪)

மகாசிவலோகத்தையடைந்தோர் மீளப்பூமியின்கட் பிறவாமன்முத்தியை யடைவரென்றுணர்த்துகின்றார்

மேலாயசிவலோகத்துள் விரவினொருமைமேவி ※
ஞாலமுமடையார்ஞாலவிருத்தியை நாசமாக்குங் ※
காலமுமணையவுள்ளக் கறுப்பினையறுத்துக்காட்டு ※
மூலபண்டாரந்தன்னை முகந்துகந்திருப்பர்முத்தர் ※

எ - று. மேலாயவிந்தச்சிவலோகத்தின்கண் அடைந்தோரவ்விடத்திலேதானே ஞானயோகத்திலொருமைப்பாட்டைப்பொருந்திமீண்டு பூமியின்கண்ணும்பிறவாராய்ச்※சிவாதிபிருதுவியந்தமானவெவற்றினையுநசிப்பிக்குஞ்சங்காரகாலம்வரும்பொழுதுதம்முள்ளத்தின்கட்கரியவிருளான வாணவபாசங்களையொழித்துச்சிவஞானங்காண்பிக்குமூலபண்டாரமாகிய ஞானானந்தசுவானுபவத்தைப் பொருந்தித் தலைமைபெற்றுமுத்தராயிருப்பர் எ - று.

※ மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே யென்பதனாலறிக [௨௫]

மேல் மட்டெறிந்தொழுகலென்னுந் தந்திரவுத்தியாற்பைசாசமுதலாயினோர்க்குச்சித்திபேதங்களை யுணர்த்துகின்றார்

அந்தியவியலினுக்குமயலயலியலின்யோக ※
பந்தியைப்பகர்வாமெட்டுச்சித்தியும்பரிவுகூர ※
விந்தநல்லியலினுள்ளு மெட்டெனப்பட்டசித்தி ※
முந்தியேபைசாசாதிக் குறுமுறைமொழிவாமோர்ந்தே ※

எ - து. ஈற்றினின்ற கோபுரவியலுக்கு மதற்கயலாகிய பரிகாரவியலுக்குமயலானசிவஞானயோகவியலிலேயட்டாங்கயோகவொழுங்கினையு மதனாலுண்டாம

---

※ பூதம் ௫ புலன் ௫ ஞானேந்திரியம் ௫ கருமேந்திரியம் ௫ அந்தக்கரணம் ௪ ஆக ஆத்துமதத்துவம் ௨௰௪ காலம் நியதிகலை வித்தை இராகம் புருஷன் மாயை ஆக வித்தியாதத்துவம் ௭ சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்திசிவம் ஆகச்சிவதத்துவம் ௫

※ திருவாசகம் திருப்பாண்டிப்பதிகம்

காலமுண்டாகவேகாதல்செய்துய்ம்மின்கருதரிய
ஞாலமுண்டானொடுநான்முகன்வானவர்நண்ணரிய
வாலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான்றன்னடியவர்க்கு
மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே

ட்டமாசித்தியினையும்விருப்பமிகும்வண்ணஞ்சொல்லோம் அஃதன்றி நன்மைபொருந்தியவித்தச்சிவதருமவியலுள்ளும்பைசாசமுதலிய புவனங்களுள்ளோர்க்கெட்டிசித்திகளுமேறியேறிவருமுறைமையையாராய்ந்துசொல்லாநின்றோம்
எ - று (உ௬)

பைசாசாதிகளுக்குச்சித்திகள் குணங்களேறிக்குறைந்துவிளங்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

எட்டெனப்பட்டசித்தியிசைந்திடும்பைசாசாதி ※
சிட்டர்கள்சேருமெல்லைசிவபுரமிறுதிதன்னி ※
லொட்டியகுணமுமேன்மேலுயர்ந்துயர்ந்தொறுமேவில் ※
விட்டொளிர்குணத்தின்மேன்மைவிளங்கிடவிளம்புவாமே ※

எ - து புத்திதத்துவத்திற்பொருந்தியதேவயோனியாகியபைசாசமுதலிய புவனத்தைப்பொருந்தியுயர்ந்தோர்கள் சேருமேலாயசிவலோகமீறானபதங்களிலேயெட்டுச்சித்தியுமதனோடுகூடியகுணங்களு மொருபுவனத்திலிருப்பாரைப்பற்றவொருபுவனத்திலிருப்பார்க்குமேன்மேலுமதிகமதிகமாயுண்டாம், அஃதெங்ஙனமென்னின், பைசாசபுவனத்திருப்போர்க்கெண்குணமும், இராக்கதபுவனத்திருப்போர்க்குப்பதினாறுகுணமும், இயக்கபுவனத்திருப்போர்க்கிருபத்தினாலுகுணமுங், கந்தருவபுவனத்திலிருப்போர்க்குமுப்பத்திரண்டுகுணமும், இந்திரபுவனத்திலிருப்போர்க்குநாற்பதுகுணமும், சௌமியபுவனத்திருப்போர்க்குநாற்பத்தெட்டுக்குணமும், பிராஜேசுரபுவனத்திருப்போர்க்குஅன்பத்தாறுகுணமும், பிராமியபுவனத்திருப்போர்க்குஅறுபத்துநாலுகுணமும், அவ்வாறுசிவலோகமீறானபதங்களிலிருப்பார்க்குமேறியேறிவரும், அதனைவிளங்கவாராயில்விட்டுவிளங்காநின்றகுணத்தின்விசிட்டத்தைமேற்சொல்லாநின்றோம் எ - று [உஎ]

திருமான்முதலாயினோர்க்குக்குணங்களேறிக்குறைந்து சேவிக்குமுறையுணர்த்துகின்றார்.

மண்புனலனல்காலவானமனமகங்காரம்புத்தி ※
யொண்குணமூலமென்னுமொன்பதும்விசேடித்தோங்கிக் ※
கண்கமலத்தமாலைக்கலந்துளேவிளக்குமெட்டே ※
வண்கமலத்தோனுள்ளேமருவியேவிளக்குமன்றே ※

எ - து பிருதிவிமுதலியவைந்துமனமகங்காரம்புத்தியுமொள்ளியகுணத்து

வேறு.

என்றுதருமத்தொடுபலத்திறமிரைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைமாய *
நின்றமுனியன்றுணைநிற்குணனினைந்தே *

எ - று - வெளி [௫௧]

மேற்சிவத்துதியுணர்த்துகின்றார்

வேறு.

உற்றவர்தீவினையோட்டினனேயுண்பலிதேர்தலையோட்டினனே *
யெற்றுபுனற்சடையேற்றினனேயிடைக்கொல்லைவெள்ளேற்றினனே *
கற்றவருக்கறங்காட்டினனேகடுநடமாடிடுகாட்டினனே *
பற்றினவர்க்கருள்பாட்டினனேபாங்கிலவென்னையும்பாட்டினனே *

எ - று தன்னையடைந்தோரது கொடியபாவங்களைத் தொடர்ச்சியறுத்தோனே, தலையோட்டின்கண்ணுண்ணற்குரியபிச்சையையங்கங்கேசென்றுதேடுவோனே, திரையெறியாநின்றகங்கையாற்றினைத்திருச்சடையின்கண்ணேற்றிமுடித்தோனே, முல்லைநிலத்தின்கண்ணுளதாயவலியினையுடையவெண்மையாகியவிடபத்தையுடையோனே, தன்பாற்கற்றோரானசனகர்முதலியோர்க்கறமுதலியநான்கினையுமறிவித்தோனே, சங்காரநிருத்தத்தைச்செய்யுஞ்சுடலையையுடையோனே, யெப்பொருளையுந்துறந்துதன்னைப்பற்றிநிற்போர்க்குமுத்தியையருளும்பெருமையையுடையோனே, பாடுதற்குரியனல்லாதவென்னையும் பாடுவித்தப்பாட்டினைக் கொண்டருளினோனே என்றவாறு [௫௨]

இதுவுமது.

கழலெனநாகமுங்கட்டினனேகண்ணிப்பிறைத்திங்கட்டினனே *
மழலைநல்வீணையின்வாசகனேமயலெனக்கற்றிடும்வாசகனே *
தழைமயிற்சாயலோர்பாலினனேசாலத்தழைத்தகொம்பாலினனே *
மிழலையுமூரெனமேவினனேவெம்புரமெய்தழிமேவினனே *

இதுவுமது

அரன்றிரவியத்தையாசா னரும்பொருளதனையார்க்கும் *
பரம்பரன்பகர்ந்தவாக்கைப்பரித்தபுத்தகத்தைப் பற்றிக் *
கரந்தவா ரன்னோருசொன்ன கரிசர்களொருமூவர்க்கும் *
வரும்பல முடையார்பாவ மனைத்தையுமருவினாரே *

எ - து சிவத்திரவியத்தையுங் குருத்திரவியத்தையும் யாவருக்குமேலானசிவனருளிச்செய்ததிருவாக்கினை யெழுதினமுறையையும் விரும்பிக் களவுசெய்தோர்முற்கூறியசிவநிந்தகர் வேதநிந்தகர் குருநிந்தகரானமூவர்க்கும்வருந்தீவினைப்பயன்களையுடையராவரஃதன்றி யெல்லாப்பாவத்தையுஞ்செய்தோருமாவர் எ - று (௰௧)

அதிபாதகஞ்சொல்லிமுடித்து அதிபாதகதுல்லியபேதஞ்சொல்லத் தொடங்குகின்றார்

வேறு

அறைந்தவிவர்களனைவர்களு மதிபாதகரோயெனவறிக *
சிறந்தவினையேதீவினையு ளதிபாதகந்தானெனத்தெளிக *
நிறைந்ததுயரோநெடுநாளோ விதனிற்படலுமெனநினைக *
பிறிந்தவதிபாதகபேதந் தனையுமினியாம்பேசுவமே *

எ - து இங்ஙனங் கூறிப்போந்த சிவநிந்தகர் முதலான விவர்களெல்லாருமதிபாதகரென்றறிவாயாக இத்தீமையானபாவங்களுள் அதிகோரபாவமென்றறியக்கடவை யிதனானிருந்ததுயரமு மனுபவிக்குங்காலமுநெடுங்காலமென்றறியக்கடவை யிதன்கூறான அதிபாதகபேதத்தையுமேற்சொல்லாநின்றோம் எ - று அதிபாதகரோசிறந்தவினையேயென்னுமேகாரமிரண்டுந்தேற்றம் நிறைந்ததுயரோநெடுநாளோயென்னு மேகாரமிரண்டுமெண்ணின்கண்வந்தன (௰௨)

அதிபாதகதுல்லியபேதத்தைப்பத்துச்செய்யுளானுணர்த்துகின்றார்

அரிகசிரமுஞ்சிவதனத்தை யபகாரகனையஃதரிதே *
லரிவித்திடுகவிருநிதிய மளித்தும்வலியாரவராலே *
யரிதேலஃதுமப்புரிவிட் டகல்கவகலாதுறைவாரோ *
லுரியாரதிபாதகத்தவனுக் கொப்பார்நிரையத்தெய்ப்பாரே *

எ - து சிவத்திரவியத்தையபகரித்தவனைத் தந்தலையைச் சேதிக்கக்கடவர் அவனைத் தண்டஞ்செய்ய வலியிலையாயின் வெகுதனங் கொடுத்தாயினும் பலவான்களாலே சேதிப்பிக்கக்கடவர் அதுவுங்கூடாதாயி னந்தத்தலத்தைவிட்டு வேறொருதேசத்தின்கட்செல்லக்கடவர் அங்ஙனமறுதேசத்திற் செல்லாமலவ்வூரிலதற்கனுமதித்திருப்பார்களாயின் அவர்களையிந்த வதிபாதகஞ்செய்தோனுக்கொத்தகுற்றத்தியனாய் நரகத்தின்கணமிழ்ந்தியிளைப்பார் எ - று

சிரமுமென்றவும்மையாற்கரமுதலியவுறுப்புக்களுமெனவறிக (௰௩)

சிவனையிகழுஞ்சிறியாரை யனையர்சிவனைப்பூசனையை *
யுவகைபுறவேகண்களிக்க வுருகிப்பரவாதுபுல்லாரும் *
அவனைச்சிவன்றனருச்சனை யன்புசெய்யாதகல்வாரும் *
புவனத்ததிபன்பவனத்துணியமத்தலறுபுகுவாரும் *

எ - து சிவனையும் அவனது அருச்சனையையுமுள்ளமகிழ்ச்சிபொருந்தும்வண்ணங்கண்களிப்பக்கண்டதனான் மனநெகிழ்ந்து துதிசெய்யாதிருப்போரும் அங்ஙச் சிவனையுமவனை யருச்சிக்கும் பூசகனையும் பத்திபண்ணுதுவிட்டுநீங்குவோரும் இருநூற்றிருபத்துநாலுபுவனத்துக்கு மதிபனான சிவனெழுந்தருளியிருக்குந்திருக்கோயிலினுசாரநியமங்ளோடுசெல்லுமதன்றி யனுசாரங்களோடே புகுவோருஞ் சிவனைநிந்திக்குமற்பரானவதிபாதகரையொப்பர் எ - று (௰௪)

பரமன்றிருமுன்னமுன்முன்னும் பரமகுரவன்றிருமுன்னும் *
ஒருமைபுறவேவறுமைபினு முதவாதவருஞ்சிறிதேனும் *
அரிதுபொருடான்பச்சிலையு மரிதோவஃதுமரிதாகிற் *
றிரணமதனைத்திருமுன்னே மாற்றலரிதோசெயலாலே *

எ - து சிவசன்னிதியிலுஞ் சிவாக்கினியின்முன்னு மேலானஞானாசாரியனது சன்னிதியினுந்தமக்குவறுமையெய்தின காலத்தினுமேதேனுஞ் சிறிதுதமக்கியன்ற மரியாதியொருப்பாடுபொருந்த க்கொடாதோரும் அங்ஙனங்கொடுத்தற்குப்பொருளரிதாகிற் பச்சிலையுங்கிடையாததோ வதுவுங்கூடாதாயிலவர்கள்சன்னிதியிற்கிடக்குஞ்செற்றையைக்கருத்துடனே திருவலகுமுதலியவற்றாற்போக்குதலுமரிதோ வரிதன்றேயாதலா லிதனுளொன்றைச்செய்யாதோருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ - று

ஓகாரம் எதிர்மறை (௰௫)

பொருவில்பொருளைப்புணர்ந்தாரை யல்லாரெல்லாம்பூரணையி *

விரவியுடனேயெழுந்திய மிசையும்பொழுதுமிணையிலியு ❋
மெரியுமியலுங்குருபரனு மிருக்குமிடத்தையலகிட்டு ❋
விரையின்விதத்தாலெழுகிட்டு விதியாற்பூசைபுரியாரும் ❋

எ - து. தனக்குநிகரில்லாதசிவத்தைக் கூடிநிட்டைபுரியுஞ் சிவஞானிகளல்லாதோரெல்லாரும் பூரணையிலுமாசித்தியமோடு கலைதேய்ந்த விளம்பிறைபொருந்துங்காலமான அமாவாசையிலுமொப்பிலாதசிவனுஞ் சிவாக்கினியுஞ் சிவாகமமுமேலானவாசாரியனுமெழுந்தருளியிருக்குந் தலங்களைத் திருவலகிட்டுமெழுகிச் சந்தனமுதலியசுகந்தவர்க்கங்களினாலே விதிப்படியருச்சனை செய்யாதோருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ - று. (௰௬)

இந்தமுறைமையியற்று மியற்றியநியதியிழந்தாரும் ❋
பந்தமானபசுபாசப் பகையைக்கெடுக்கும்பரம்பரனைச் ❋
சிந்தைக்கரியசிவமுதலைத் துயக்கமறவேதெருண்டாரை ❋
நிந்தைநிகழ்த்துநிறையில்லாக் கல்லாப்பொல்லாநீசருமே ❋

எ - து. இங்ஙனங்கூறிப்போந்த நிறத்தோரன்றி யாசாரியராலே சங்கற்பித்தமூட்டித்துவரும் விரதங்களைவிட்டோரும் ஆன்மாக்களிடத்தனாதிசம்பந்தமானவாணவபாசமானபகையைப்போக்கும் பரம்பரனையவர்க்கு மனத்துக்கெட்டாதசிவமாகியமுதலைத் தம்முடையவஞ்ஞானநீங்கும்படியுணர்ந்த ஞானவான்களை நிந்தைசொல்லுநிறையில்லாத அறநூல்கல்லாத பொல்லாதஅற்பருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ - று.

சிவனையிகழுஞ்சிறியாரையனையாரென்பதனையெவ்விடத்தும்வருவிக்க [௰௭)

சிந்தைநிகரின்ஞானத்தை நிகழ்த்துமவரை நிகர்ப்பார்தஞ் ❋
சிந்தைநிகழவருச்சனையைச் செய்யாதறநூலிளைப்பாரு ❋
மிந்தவியலையெழுதினரு மிதனைப்பிறருக்கிசைப்பாரும் ❋
வந்துபொருவில்வாய்மொழியை மதிப்பாரவருமனத்தாலே ❋

எ - து. தம்முடையஅறிவு விளங்கும்வண்ணம் ஒப்பில்லாத சிவவாக்கியமான அறநூல்களைமலர்முதலியவற்றாற் பூசைசெய்யாது படிப்போரும் எழுதுவோரும் பிறருக்குப்பாடஞ்சொல்லுவோரும் மனத்தாற்சிந்தனைபண்ணுவோருஞ்சிவஞானநிந்தகருக்கொப்பர் எ - று.

அருச்சனைசெய்யாதென்பதனைமுற்றுங்கூட்டுக [௰௮]

காயசுத்திபண்ணாது கற்பிப்பாருங் கற்பாருந் *
தேயசுத்திசெய்யாது சிவஞானத்தை சிந்தனைசெய் *
தாயுமவருமவர்தம்மையடைந்து துயக்கமறவெண்ணி *
வாய்மைப்பொருளை மதிப்பாருங்கற்பார்தாமும்வராமலே *

எ - து சிவஞானத்தைநீராடல்முதலியவற்றாற்சரீரசுத்திசெய்யாதுபடிப்பிப்பாரும் படிப்பாரும், அதனைத்திருமெழுக்குமுதலியவற்றாற்சுத்திசெய்யாத தலத்திருந்துசிந்தித்தாராய்வோரும், அங்ஙனமாராய்வோரைச்சேர்ந்து தனக்கையந்திரிவறும்படி கருதியுண்மையாகியதிவ்வியாகமப்பொருளைக்கேட்போரும் நன்றாகப்படிப்போருஞ், சிவஞானநிந்தகருக்கோப்பர் - எ - று

தேசத்தைத்தேயமென்றார் [௰௧]

ஆசையதனாற்சிவகோச மதனைப்பொருளுக்களிப்போரும் *
தேசிலவலதேசத்திற் சிறந்த மறையைச்செப்பாரும் *
பாசப்பகைவன்பகர்மொழியை ப்பயிலாதபநூல்பயில்வாரும் *
ஏசற்றரன்வாக்கியமற்று மேதையகத்துவிரிக்கவுமே *

எ - து திரவியத்தின்கணுள்ளவாஞ்சையினாலே திவ்வியாகமத்திருமுறையை விற்குமவரும் பரிசுத்தமில்லாத வசுத்தபூமியிலேயதனைவைக்குமவரும் மாண்மாக்கள்பாசத்துக்குச்சத்துருவானசிவன்அருளிச்செய்தவேதாகமங்களைச்சகன்மைமலன்னியமானபசுநூல்களைககற்போருந்தம்முள்ளத்தின்கணிருந்த பத்தியுண்டாயிருக்கவுங்குற்றமற்றசிவநூலை மேன்மேலும்விரியக்கல்லாதிருப்போருஞ் சிவஞானநிந்தகருக்கொப்பர் எ று

ஏசற்ற என்னுஞ்சொல் ஏசற்று என்விகாரமாயிற்று நிந்தைக்கின் ஞானத்தை நிகழ்த்துமவரைநிகர்ப்பாரென்பதனை யெவ்விடத்துமவருவிக்க [உ௰]

பொருவில்குரவனிந்தனையை ப்புரிந்தாரவரைப்புரைவார்கள் *
பரிவாலவரையருச்சனையை ப்பண்ணாத்தறநூல்பயில்வாரு *
முருகிப்பணியையுஞற்றாரு முஞற்றுமவரையொழிப்பாருந் *
திருவாய்மொழியைத்திளைத்திறைஞ்சி ச்சிறந்ததுதிகள்செய்யாரும் *

எ - து தேசத்தினாலேயாசாரியனை ப்பூசைசெய்யாமற் புண்ணியநூலைப்படிப்பாரு முள்ளமுருகியவர்பணிவிடையைச்செய்யாதோருமங்ஙனம்பணிவிடைசெய்வோரைக்கலைத்துவிலக்குவோரு மந்தவாசாரியர்திருவாக்கினைக் கூறுமாகமவசன

ங்களை நன்றாகக்கேட்டு மகிழ்ந்தவரை மேலானதோத்திரங்கள்செய்து வணங்காதோருங் குருநிந்தகருக்கொப்பர் என்று (௨௧)

காவிருந்தாமுனிசைப்பாரு மிளைத்தபருவமெனவெண்ணிப் *
பிரிருமவருமெதிரியாரும் பிழைபுவந்துரியுமபிணியுறினும் *
புதல்வர்தமையுமனைதனையும் பொருந்துஞ்சுற்றத்தவர்தமையும் *
பதமோவென்னவவமதியை ப்பண்ணுமவரும்பாவிறவே *

என்று ஆசாரியனேவியபணிவிடையைச்செய்யாமல வருடனெதிருத்தரஞ் சொல்லுவோரும் அவர்க்குமிடியெய்தியகாலத்து அவரைப்பாதுகாவாமலிகழ்ந்து போவோரும் அவர்ஞாதிமுதலியவெதிர்வாதிகளாலேயபசயப்படினும்வியாதிகளை ப்பொருந்தினுஞ்செயித்துக்காவாமல்விட்டுநீங்குவோருங் குருபுத்திரரையுங் குரு தேவியையுங்குருவினோடுசம்பந்தமான சுற்றத்தோரையு மிரக்கமற்றுநொய்தாகக் கருதியிகழ்ச்சிசெய்வோருங் குருநிந்தகர்க்கொப்பர் என்று

பொருவில்குருவினிந்தனையைப்புரிந்தாரவரை ப்புரைவார்களென்பதனை யீண்டுப்பவருவிக்க (௨௨)

இங்ஙனமதிபாதகதுல்லியரையுணர்த்திமேல்மகாபாதகரையுணர்த்துகின்றார்

அதிபாதகருக்கணியாரிவரொன்றறிமா பாதகரைப் *
பொதியமாமுனிவனியினியிரைய ப்புந்திசெய்கபுகன்றிடுவா *
மதியால்வதனவாய்தன்றன் மனமுடையவடிவதனா *
லுதயமானபாவங்கள் கேட்பார்தமக்குமொழிந்திடவே *

என்று பொதியமாமலையிலிருக்கு மகத்தியமுனிவனே யிங்ஙனங் கூறியதிறத் தோரெல்லாமதிபாதகருக்கடுத்தோரொன்றறியக்கடவை யித்திறத்தினைக்கேட்போ ர்க்குமனத்தினாலுமுகத்தின்கண்ணுள்ள வாக்கினாலுமழுக்கினையுடைய காயத்தினா லுமுண்டான பாவங்களெல்லாமொழியும்வண்ண மிப்போதுனக்குமகாபாதகரை ச்சொல்லாநின்றேமதனைச்சமுத்தியிற்புத்திபண்ணிக்கேட்பாயாக என்று

கேட்போர்க்குமென்றவும்மைபடிப்போர்முதலியோர்க்குமெனஎச்சத்தின்கண்வந்தது (௨௩)

பஞ்சபாதகரிவரென்பதுணர்த்துகின்றார்

கொன்றான்மறையோன்றனைமதுவைக்குடித்தமறையோன்சோரத்தால் *

யுயர்வாகவென்னுமறிவில்லாதவனும்- மேலானவாசாரியரோடுவிரோதம்பண்ணிக்கொள்ளுமறிவில்லாத- அற்பனும்-பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் எ - று [உ௬]

உண்ணவறன்மேற்செலுமாக்களினையுந்தடுத்தேயொறுப்பானு *
நண்ணியிரப்பத்தருவலெனநயந்துகூறியவர்வரவி *
லெண்ணமிழந்து நம்பொருளுமிலமேயெனவுமிசைப்பானுந் *
தன்மையுரையைத்தூறியனைச்சாற்றுமவனுஞ்சபைநடுவே *

எ - து தண்ணீருள்ளவிடத்திற்குடிக்கச்செல்லும்பசுக்களையுமறித்துத்தண்ணீர்குடியாவண்ணம்வாதைபண்ணுவோனும்- தம்பால்வந்தொருபொருளையிரந்தபோது நருகின்றேனென்றுநேர்ந்துமுற்கூறிப்பின்பவர்தம்மில்லின்கண்வந்தபோதக்கருத்தைவிட்டுமக்குத்தரும்பொருளும்யாமுடையோமல்லவென்றுசொல்வோனும்- அறிவான்மிக்கோனைச்சபைநடுவேயிழிபானவசனங்களைச்சொல்வோனும்பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் — எ - று

ஆக்களினையுமென்னுமும்மைமற்றுள்ளவிலங்குபுட்களையுமென- எச்சத்தின்கண்வந்தது- மேல்வருஞ்செய்யுளிற்பிரமக்கொலையர்க்கிணையென்பதையிச்செய்யுளோடுங்கூட்டியுரைக்க [உ௭]

அரசன்செவியிற்பிறர்குறையையறிவிப்பவனுமந்தணர்க்கும் *
பரசுபாணிமுதலோர்க்கும்பாங்காநிலனைப்பறிப்பானு *
மொருவும்வகையையுரைப்பானுமதனுள்விளைவையுண்பானும் *
பிரமகொலையர்க்கிணைமதுவைப்பீதற்கிணையும்பேசுவமே *

எ - து பிறர்குற்றங்களையிராசாவின்செவியிற்சொல்லியறிவிப்போனும்- பிராமணர்க்கும்- மழுவைக்கையிலேந்துஞ்சிவன்முதலாயுள்ளகடவுளர்க்கு- முரிமையானபூமியைக்கட்டிக்கொள்வோனு- மந்நிலமவர்களுக்காகாமற்போம்வண்ணஞ்சூட்சிசொல்லுவோனு- மந்நிலத்திற்போகங்களையெடுத்துக்கொண்டுண்போனும்- பிரமகத்திபண்ணினோர்க்கொப்பாவர்கள்- மதுபானம்பண்ணினோர்க்கொப்பாரையுமேற்சொல்லாநின்றோம் - எ - று [உ௮]

மகாபாதகத்துல்லியருண்மதுபானம்பண்ணினோர்
க்கொப்பாரையும்பொன்றிருடினோர்க்கொப்பா
ரையுநான்குசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஆதியமலனருளாளனனகனருள்செயாகமத்தை *
யோதியதனையொழிப்பானுமொளிசேரழலையோம்பானு *
மாதாவுடனும்பிதாவுடனுமாறுயவர்சொன்மறுப்பானு *
மோதாவுரையையுரைத்தானென்றுற்றேநடுவாயுரைப்பானும் *

எ-து எவற்றிற்குமுதல்வனுமாய்நின்மலனுமாயான்மாக்களிடத்திலேயிரக்கத்தையுடையனுமாயப்பாவமில்லாதவனுமாயிருக்கிறசிவனருளிச்செய்ததிவ்வியாகமத்தையோதியதனையிடையிலேவிட்டவனு- மொளிபொருந்தியவக்கினிகாரியநாடோறுஞ்செய்துவந்துபின்பதனையிழந்தோனும்- மாதாபிதாவுடனும்விரோதித்தவர்கூறிய- சொற்களைமறுப்போனு- மொருவன்சொல்லாதவார்த்தையைச்சொன்னானென்றுசபைக்கண்வந்துநடுச்சொல்வோனுமென்பவாறு [உகூ]

தோழன்றனக்குத்துயரத்தைத்துய்ப்பிப்பவனுந்துர்ச்சுறுக்கு *
மேழைபாகனடியாளையிடரைச்செயவும்நினைந்தானும் *
பாழென்றறநூல்பழித்தபொருள் பண்டமெனக்கொண்டுண்டானும் *
வாழும்வனத்தாமாக்களையும் வருத்துமவனுமயலுறவே *

எ து வெளி

ஆமாக்கள் பசு மான் மனைமுதலியவிலங்கினங்கள் ஆமாக்களையுமென்னுமும்மைபறவைகளையுமெனவிளக்கிற்று (௩௰)

ஆக்களணையுமார்க்கத்தி லடவியதனுளரும்பதியுட் *
பார்க்குண்மதித்தபட்டினத்தும் பழுதேயழலைப்படிப்பானு *
நீக்குமதுவையுண்டானை நிகரோவறியார்நிதிமுதலுங் *
காக்குமனையோகரிபரிதேர் கவினார்மணியுங்கவர்ந்தானும் *

எ து பசுக்கணிற்குங் கொட்டகைவாசலினும் வனங்களினுமரிய சிவத்தானங்களினும்பூமியுண்மதித்துச்சொல்லப்பட்ட பட்டினங்களினு மொருகாரணமின்றித்தீவைப்போனு மிவர்களெல்லாம் அறநூலிலாகாதென்று நீக்கு மதுபானம் பண்ணினோர்க்குநிகராவர்கள் மிடியராயுள்ளோருடைமைமுதலாயினதுங் காவல்பெற்றிருக்குமில்லமட்டோயானை குதிரைதேரிவைகளையுமழகு நிறைந்தரத்னத்தையுங்கரந்துகொண்டானும் எ று

வறியோர்நிதிமுதலுமென்னுமும்மையாற்பெரியோர்நிதிமுதலுமென வறிக (௩௧

து சொன்னோம், மேலிதற்கடுத்த வுபபாதகத்தையுஞ் சொல்லாநின்றோம் என்று ௯௪

முற்கூறிய வுபபாதகத்தை விரித்துணர்த்துகின்றார்

இச்செய்யுண் முதலனவே யிசைத்த வென்னுஞ் செய்யுளீறாக விருபத்தொரு செய்யுளுமொருதொடர்க்குளகம்

மறையோர்க்கெனவே வைத்தபொருண் மதியாததனை வௌவினனு *
நிறையாற்பெரியோர் நிதியதனை நிரந்து கவர்ந்த நிலையினனும் *
பிறராலதனுக்கிடையூறு பேணுமவனும் பெருங்குலமு *
மறிவுமருளு முடையமெனு மகந்தையுடைய வவலனுமே *

எ - து. பிராமணர்க்கென்று நியமித்து வைத்த பொருளை யவரையவமதித்தெடுத்துக்கொண்டவனும் வேதாகமங்களின் வழியேயற்றக் குறைச்சலின்றி நின்ற நிலைமையான் மிக்கோரான நல்லோர்கள் திரவியத்தைக் கலந்தபகரித்த நிலையில்லாதோனும், பிறராலேயவருடைய திரவியத்துக்கிடையூறு விளைப்போனுமெல்லாரினும் பற்றப்பெரிய சாதியுமறிவுமிரக்கமும் யாமே யுடையோமென்னு மாங்காரத்தை யுடைய பொல்லாதவனும் எ - று. (௯௫)

விடைத்துத்தவரை வெகுள்வானும் விடம்ப முளத்துள் விரவினனு *
மிடுக்கண் கெடுத்த வினியாரை யெண்ணுவவலத் திண்ணியனுந் *
தடுக்கத்தரியா வாசையுடன் போகவிதத்தைத் தரிப்பானுங் *
கொடுக்கச்சிறிதுங் குறியாது கொள்ளுங் கருத்தேயுள்ளானும் *

எ - து. தபோதனரைக் கடிந்து கோபிக்குமவனுமுள்ளம் பிறிதொன்றாயிருக்கப் பிறர் மதிக்க விரதமுதலியவற்றைச் செய்ய விரும்பினோனுந் தனக்கு வந்த விடையூறுகளை நீக்கின நல்லோரை யவமதித்த பொல்லாத கன்னெஞ்சனுந் தடைபடாத வாசை மிகுதியாலே போகவிதங்களை யனுபவிப்போனு மற்பமுமொருவர்க்குக் கொடுக்கக் கருதாது பிறர் கையிலுள்ளவற்றை வாங்குங் கருத்தேயுடையோனும் எ - று.

விடம்பம் உள்ளொன்று புறம்பொன்று (௯௬)

மாணுவுள்ளத்தவஞ்சகனும் வயிரமுடைய மனத்தினனும் *
பூணார் முலையை மணஞ்செய்து புணர்ந்தானிருக்கப் புலனிழந்த *
பாணார்மொழியைப் பைங்கிளியைப் பணைத்தோளிணையைப் பயின்றதனு *
லேணுமெண்ணுமிரண்டினையுங் கண்ணுவெண்ணுவெளியனுமே *

எ - று உள்ளத்தின்கணமைவுபடாதவஞ்சனையையுடையோனு மொருவனேருதற்றஞ்செய்யி லதனையக்கணமேமறவாம லென்னாளு நினைத்திருக்குமாச்சரியத்தையுடையவுள்ளத்தையுடையோனு மொருத்தியைக் கலியாணஞ்செய்தவளுடையவாபரணமணிந்தமுலைகளைக்கூடிய கணவனிருக்கவுமந்தவிசைபொருந்திய மொழியினையுடையாளான பசுங்கிளிக்கொப்பாளதுவேய்போன்றதோளினையின்கணறிவின்றிப்புணர்ந்து பெருமைநாணென்னுமிரண்டினையுந்தனக்குக்கண்ணாகவிசாரித்தறியாதவேழையும் எ - று [௰௭]

கொழுநன்றனையேதெய்வமெனக் குறித்துத்தருமநெறிகோணு *
தொழுகும்விரதவுத்தமியை நொய்யளெனவேயுளத்துன்னு *
மிழுதைதானுமிவளெளியளென்றே யவடன்னிணைத்தோளைத் *
தழுவக்கருதுந்தன்னரியனுங் கண்ணுற்புணர்ச்சிதரிப்பானும் *

எ - து வெளி [௰௮]

கரிசுசிறிதுங்கருதாத கவிஞர்மரபிற்கன்னிகையைத் *
தரிசுமுடையளிவளென்று சொல்லுமவலத்துர்ச்சனனு *
மொருவன்சிவனுண்டென்றுணர்ந்த பனவன்றனைத்தேர்ந்துதவாதே *
பரிவுமறிவுமுடையனை மற்றொருவற்குதவும்பழியினனும் *

எ - து வெளி பனவன் பிரமசாரி (௰௯)

தருமமணமேபிரமாதிநான்குந் தலைமையிடைமணந்தா *
ரொருவனொருத்தியெனுமிவர்த மொப்பிற்பரிவுற்றுறும்புணர்ச்சி *
கருதிற்கடைமூன்றுசுரமுன் கடையென்றவற்றைக்கழியாதே *
விழைபவிழைந்துபுணர்ந்தறத்தை விதித்தமொழியைவிடுத்தாரும் *

எ - து பிரமம், பிராசாபத்தியம், ஆரிடந், தைவமாகிய, இல்லறத்திற்குரியமணநான்குமுத்தமம், காந்தனுங்கன்னிகையுமானவிருவருந்தம்மனப்பொருத்தத்தாலன்புற்றுப்புணருங்காந்தருவப்புணர்ச்சியிடையாயமணமாம், ஆசுரம் இராக்கதம் பைசாசம்,ஆகியமூன்றுமாராயிற்கடையாயமணமாம்,இவற்றுட்கடையென்றுகூறிய, ஆசுரமணமுதலியவற்றைநீக்காமலாசைமிகுதியாலேவிரும்பிச்சடுதியிலேவேட்டுப்புணர்ந்தில்லறநெறியைவிதித்துக்கூறியவேதாகமவசனத்தைவிட்டோரும் எ - று

வங்கிலையென்றுறுதியிடாத பிராமணரும் எ - று [௪௫]

தன்னாற்சமைத்ததடாகத்தைத் தருக்களைத் தாரத்தைப் *
பொன்னேயனையபுத்திரனைப் பொருட்குக்கொடுக்கும்புல்லியனும் *
நன்னோன்புடையார்தனந்தனையு நயந்துகொள்ளுநலமிலியும் *
உன்னைப்பரிப்பலெனப்பாரி யுடைமைதனைக்கொண்டொழிப்பானும் *

எ - து தன்னாலுண்டாக்கின குளங்கள், வாவிகள், மரங்களையுந் தன்மனைவியையு ம்பொன்போன்ற தன்மைந்தர்களையும் பொருளுக் குவிற்குமீனனும் நல்லவிரதமில ராயுள்ளோர்கள்திரவியத்தை விரும்பியபகரிக்குந்தீயோனும் நின்னுடைமையைப்ப ல்கும்வண்ணம்பெருக்கி யுன்னைக்காப்பே னென்று தன்மனைவியாதிமுதலிய கைப்பொருள்களை வாங்கிக்கொண்டுகாவாதுவிடுவோனும் எ - று [௪௬]

தேறலருந்துந்தேமொழியைத் திரோக்குமறிவில்சிறியானும் *
வேறுசிலர்கைப்பொருடன்னை விரும்பித்தருவெனவாங்கிப் *
பேறுமவர்க்குப்பிழைப்பானும் பேறுஞ்செந்நெற்பிறர்தம்பாற் *
கூறிக்கொடுத்துவிருத்தியினைக் கொண்டேயருந்துங்கொடியனுமே *

எ - து மதுபானம்பண்ணுந் தேன்போலு மொழியினையுடையாளைப் புணருமறிவில்லாதவற்பனும் பிறிதுசிலர்கைப்பொருளை யிச்சித்துத்தருவனென்றுவாங்கிய ப்பொருளையுங்கொடாமற் பிழைசெய்வோனும் யாவராலும் விரும்பப்பட்டசெஞ் சாலிமுதலியநெல்லினைப் பிறரிடத்துவட்டிக்குக்கொடுத்து அந்தவூதியங்கொண்டு பொசிக்குந்தீயோனும் எ - று [௪௭]

குற்றமுடையான்வினைதணிக்கக் கொடுக்கும்பொருளைக்கொள்வானும்
விற்கத்தகுதியல்லாத வஸ்துகளைவிற்பானுங் *
கற்பால்வசியமுதற்செய்து கனகங்கொள்ளுங்கரிசினனு *
நிற்பார்நியமத்திலொனவே நிகழ்த்தத்துடங்குநியதியனும் *

எ - து யாதாமொருகுற்றங்களையுடையன் தான்செய்தபாவந்தணியும்படிக்கு க்கொடுக்குந்தானத்தையேற்போனும் விற்பதற்குரிமையல்லாதவன்னமுதலாயின வற்றைவிற்போனு மந்திரநூல் விதியினாலே ✠ வசியமாகரிஷிணமுதலிய வறுவ

---

✠ வசியம் ஆகரிஷிணம் மோகனம் தம்பனம் உச்சாடனம் மாரணம்

கையினைச்செய்துபிறர்பொருள்களை வாங்கும்பொல்லாதவனும் நீதிவழிநடப்போரிவரொன்றுபிறர்புகழும்வண்ணம்பாவித்துத்தொடுத்துநடந்து நியமானுட்டானங்களையுடையோனும் என்று [௪௮]

கொடுத்துத்தனத்தைவேதமுதல்கொள்ளுமவனும்பொருள்கொண்டு ❀
படிப்பிப்பவனும்படிமத்தை ப்பரித்தேயொழிக்கும்பாங்கிலியுந் ❀
திடத்தையிழந்துதெரிசனங்களை யோத்துமதித்துத்திரிவானும் ❀
அடுத்தசமையத்தைப்பசுநூல் வழியென்றுகற்றறிவானும் ❀

என்று திரவியங்கொடுத்து வேதம்வேதாங்கமுதலியநூல்களைப் படிப்போனும்பொருள்வாங்கிப்படிப்பிப்போனும் யாதாமொருவிரதத்தை யனுட்டித்ததனை யிடையிலேவிடுத்திடமில்லாதோனுஞ் சைவசித்தாந்தநிலையே மேலானநிலையென்னுமுறுதியைவிட்டுமற்றுள்ள சமையதெரிசனங்க ளெல்லாவற்றையுமேலாகமதித்துநடப்போனுந் தானின்றசமையத்துக்கன்னியமானபசுநூலினைமுத்திநெறியென்றுகருதிப்படிக்காராய்வோனும் என்று [௪௯]

அறிவையளிக்குமநுவன்றி யவலத்தருக்கமறைவானு ❀
மறுவில்வடிவானவரை வன்னியதனைமந்திரத்தைப் ❀
பெறுவித்தருளும்பெரியோனை ப்பேணுதொழிந்துபிழைப்பானு ❀
மறையோர்தமையும்பசுவினையு மாமாத்தெனவெண்மனிதரையும் ❀

என்று ஞானத்தையுண்டாக்குந் தருக்கத்தைப்பேசுவதன்றிக் குதர்க்கத்தைப் பேசுவோனுங் குற்றமற்ற வடிவினையுடைய தேவர்கள க்கினிமந்திரங்களி வையிற்றையாராதனைசெய்யக்கற்பித்தருளுமாசாரியனையும் பிராமணரையும்பசுக்களையுமிகவுமகத்துக்களென்னப்பட்ட பெரியோர்களையும்பத்திபண்ணுதுவிட்டு அவர்களுக்குத்தீமைசெய்வோனும் என்று

மகாமகத்தென்னும்வடமொழி மாமாத்தெனத்திரிந்தது [௫௰]

அரசன்றனையுமபவாத மறையுமவனுமவன் முன்னு ❀
முரியவினையைப்பிதிர்தேவர்க் குதவாதவனுமொழுங்கிலியும் ❀
பரமசிவனுமறநெறியும் பாவவிதமும்பரபதமு ❀
நரகவிதமுமிலையென்றே நவிற்றுமவனுநாடோறும் ❀

என்று இராசாவையுமவன்முன்னே பழிச்சொல்சொல்வோனும் பிதிர்க்களுக்

சொல்லொருநம்பருந் துன்பத்தைமுறைமை யன்றனஞ்செய்யாமலாசை மிகுதியாலே யறிவுமயங்கிப்பிறராற்சொல்லும் பழிச்சொல்லையும்பாதுகாவாமற் பெரியோர்களுக்குமருத்துவியாமற்பொசிக் கிறேமேயென்றுகூசாமற்சற் றுமிரக்கமுஞ்செய்யாமற்றன்னொருவனேயிருந்துபொசிக்குங் குணக்கேடனும் என்று (௫௪)

எனவோதிசைத்தவித்தொகையிலெண்ணுமிவர்களெல்லோரு *
மனமேமொழிந்தபாதகத்திற் றணியவுபபாதகமுற்றாம் *
வினையாரிணைவேல்விழியாருமிவற்றைப்புரிவில்லவரல்லா *
ரினியாருமெனவதிற்றீயபாவிகளுமியம்புவமே *

என்று கூறியவித்தொகையிலெண்ணுநிற்கு மிவர்களெல்லோருமிவற்றிற்குமுன்றுசொன்ன பாதகத்துக்கு த்தண்ணிதான பாதகத்தை ச்செய்யுங்கள்ளிகள்தானவுபபாதகராம், வேல்போன்ற விரண்டுவிழியினையுடைய மடவார்களுமுற்கூறியபாதகங்களைச்செய்யினவர்களும் வேறுகாராயதிபாதகமுதலிய பெயரினைப்பெறுவர்கள், வாராயகத்திய முனிவனே மேலிந்தவுபபாதகத்துக்குத்தண்ணிதானபாவபேதத்தையு முனக்கியம்பிச் சொல்லாநின்றோம் மதனைக் கேட்பாயாக என்று (௫௫)

முற்கூறியவுபபாதகத்துக்குத் தண்ணிதான பாவபேதங்களைவிரித்துரைக்கின்றார்

இச்செய்யுள் முதல் என்னுமித்தொகையாவருமென்னுஞ் செய்யுளீறுகநாற்பத்தொருசெய்யுளுமொருதொடர்க்குளகம் (வேறு)

ஆசினுக்கு மருமறையாறங்க *
நாவினோர்க்குந் தன்னையனுக்குமெய்த் *
தாபதர்க்குஞ் சகிக்குந்தகைமைய *
காவிபோல்விழி க்கன்னிகையார்க்குமே (௫௬)

உற்றகாரிய த்தூறுகடன்னையு *
முற்றுவானு முகிழ்த்தமகிழ்ச்சியைத் *
துற்றுவார்தமை க்கண்டுதுயக்குறும் *
பற்றிலானும் பரருருப்பற்றியும்

என்பன, பசுவுக்கும்நாலுவேதமு மாறங்கமும் பயிலுநாவினையுடை யபிராமண

ர்க்குந்தன்னுடைய ஆண்டவனுக்கும் வேடங்கட்டி நடிப்பதன்றி யுண்மை யானது போதனர்க்குந்தனதுதோழனுக்கு மழகினையுடைய நீலோற்பலமலர் போன்றகண் ணையுடையகன்னிகைகளுக் குமுற்றகாரியங்க ளிலேயிடையூறுகளையுஞ் செய்வோ னுநல்வினையாலுண்டாகியசெல்வத் தையனுபவிப்போனைப்பிறருடைய ரூபலாவ ண்ணியத்தையுங்கண்டுபொருமலறிவுவருந்துமன்பில்லாதோனும் எ று (௫௭)

ஈட்டினோர்தனந் தன்னைப்பிறைக்குறக் ❊
காட்டினனுங் கருதியகையனும் ❊
பாட்டினனும் பாவையார் தூடணை ❊
நாட்டினனு நரர்க்குவையுமே ❊

எ து நன்முயற்சியாலார்ச்சித்தோரது அடக்கப்பொருளையாசனுக்குக்காட் டினவனு மப்பொருளை யிவ்வளவோவென்று நினைத்து மனம்புழுங்கியகையனு நற் குணநற்செய்கைகளையுடையமாதர்களிடத்துத் தூஷிக்கத்தக்கபாட்டுக்களைப்பாடி னவனுங்குணவான்களிடத்துக்குற்றத்தைக் கற்பிப்போனும் எ று

இதனுள் ஈட்டினோர் ஆர்ச்சித்தோர்கையன் ஈனன் (௫௮)

இச்செய்புள் முதலாகநீக்குவானு மலசலநித்தலுமென்னுஞ் செய்யுளீறாக நா லுசெய்யுளுமொருதொடர்

ஆக்கள்சேரிடத் தாகுதிச்சாலையுட் ❊
டேக்குநீர்த்தடந் தேர்திகழ்வீதியுள் ❊
வேர்க்கனுந்தரு ச்சாயையில்வெற்பினிற் ❊
பூக்கிளர்ந்தபொழிலின் புடையுமே (௫௯)

சிலையினீரிற் சிகதையிற்றேவர்த ❊
மெலையின்மார்க்கத்தி லில்லத்திலீமத்திற் ❊
றொலைவிலாததூர் வாதியிற்றும்பையி ❊
னிலைமைமாதவர் நீடு நிலத்துமே ❊

சிகதை மணற்குன்று (௬௰)

உன்னத்தக்கதலத்தி லுவர்தனிற் ❊
செங்கலாதிய செய்யிற்சிறப்புறு ❊
வன்மிகாதியிற் குறும்புவனத்தினுட் ❊

உடலினைத்தாரிகர் கோமயபந்தன்னினும் (௬௧)

நீக்குவானுமலசல நித்தலு ✽
நாக்கிறேன்மதுபான நயந்துறு ✽
பார்க்கனு புபுவாதி விசேஷதபு ✽
மார்க்கும்வீணனு மாடிடுமற்பனும் ✽

என்பன,முன்னைச்செய்யுட்களிற்கூறிய,வந்தந்தவெல்லைகளிலேமல செலங்களை விடுவோனும் நாடோறுமதுபானத்தை நாவினால் விரும்பிப்பொசிக்குமறிவில்லா தோனுந்துந்துமிமுதலியவாத்தியங்கள்கீதங்கள்கூத்துக்களிவையிற்றை விரும்புமவர்த்தனும் கூத்துக்களையாடாநிற்குஞ்சிறியோனும் என்று (௬௨)

தேக்குநீர்விளையாடுஞ் சிறியனு ✽
மார்க்குமெருஞ்சத்தவர் தமக்கந்தரம் ✽
பார்க்கும்பாங்கிலி தானும்பலர்செலு ✽
மார்க்கந்தன்னை த்தடுக்கும்வலியனும் ✽

என்று நிறைநீரிலேநீந்திவிளையாடுமற்பனும் புலன்வழிபோகாமன்மனத்தைநிறுத்தும்பெரியோர்களுக்குக்குற்றத்தைத்தேடு நீதியில்லாதோனும்பாலருநடக்கும்வழியைமுள்முதலானவற்றாலடைத்துவிலக் குமிரக்கமற்றோனும் என்று (௬௩)

ஈடிலார்மனையாதிய வெல்லையைப் ✽
பாடிலாரொன ப்பற்றும்படிறனுங் ✽
கூடமான கருமமுங்கூறிடு ✽
மூடனும்மதனைச்செயு மூர்க்கனும் ✽

என்று பெலமின்றியிளைத்தோர்கள் மனைமுதலாகிய பூமியையவர்களாதற்குரிமையல்லவென்று கைக்கொள்ளும் வஞ்சகனு மொருவருஞ்சொல்லாது மறைக்கத்தக்ககாரியங்களைச்சொல்லு மஞ்ஞானியானவனும் அந்தக்காரியங்களைப்பிறர்காணச்செய்யுமறிவில்லாதோனும் என்று (௬௪)

ஒளித்துநின்றுபகைவனையூறுசெய் ✽
வெளிற்றனுங்கன்னக்கோலிடுமிண்டனுந் ✽
தெளித்தசொல்லைவளக்கிடைச்செப்பிடா ✽
தொளிக்கசொல்லை நிகழ்த்திடுநீசனும் ✽

எ-து. தன்சற்குருவானவனையொளித்து நின்றுகொல்லுஞ்சேவகப் பாதகலாதோனுங் கன்னக்கோலெடுத்துப்பயிற்றிநிதிநிம்பனு நிருவர்தம்முண்மாறுகொண்டவழக்கின்வந்தேறியவிடத்து மனுநூன்முறையேயாராய்ந்துதீர்த்திடவிட்டசொல்லவழக்கின்கட்சொல்லாது வாரம்பற்றி யோரமாகச் சொல்லும் புலையனும் எ-று. [௬௫]

கொடுமராகியைப்பண்ணிநிங்கோணனுங் ※
கொடுமராகியைக்கொள்ளுநங்கொடியனு ※
மடியர்பாலிரங்காதவலலனு ※
மடியர்தம்மையொறுத்திடுமற்பனும் ※

எ-து. வில்லுமுதலியவாயுதங்களைப்பண்ணுந் தீத்தொழிலோனும் அவ்வாயுதங்களைவிலைகொடுத்துக்கொள்ளுந் தீயோனுந்தன்னடியாரிடத்திரக்கமில்லாதபொல்லாதவனுமவ்வடியாரைக்கடிந்து கோபிக்குஞ்சிறியோனும் எ-று [௬௬]

ஆவினைத்தமிப்பானுமலனுற ※
நாவினாற்பொய்நவிற்றுநரகனுங் ※
கூவவந்ததுகேட்குங்கொடியனுங் ※
காவலர்க்கபராதக்கருத்தனும் ※

எ-து. பசுக்களைவருத்தமுறும்படி யடிப்போனும் நாவினாலேயசத்தியஞ்சொல்லுநரகத்துக்குரியோனு மதனைச்சொல்லுமிடத்துச்சென்றுகேட்கும்பொல்லாதவனுந் தமதுகருத்தனுக்குக்குற்றஞ்செய்யுமனத்தை யுடையோனும் எ-று (௬௭)

உறவினுக்கபராதியுமூனுடற் ※
பிறவிவேரினைப்பிழும்பெருவலி ※
பறிவனுக்கு நல்லாரியனுக்கலற் ※
புறனுரைக்குமவலப்புலையனும் ※

எ-து. சுற்றத்தார்க்குத்தீங்குசெய்வோனுந் தசைபொருந்தியவுடம்பினையெடுப்பதற்கு மூலமாகியவாணவத்தைக்களைந்துபிறங்குமிதந்திடமான வறிவினையுடையநல்லவாசாரியனுக்குப் பொல்லாப்புச்சொல்லுந் தீமையை யுடையகன்மசண்டாளனும் எ-று (௬௮)

சொக்கிடுந்தொழில்வல்லதுரிசனு ※

மூடலிளைத்துநிற்குமெருதுகள்மேலேபொதிமுதலியமிகுந்தபாரங்களை யெடுத்து மற்பனும் எ - று [எ௨)

விடையின்பீசத்தைவெட்டிய வினைஞரா *
லுடையச்செய்விக்குமூடனும்வந்தையி *
னிடையிற்பாரமெடுத்துமிழுத்தையு *
மிடபந்தன்னிலெடுத்துமிழுக்கனும் *

எ - று சேக்களினுடையபீசத்தைக்கொடியதொழிலினையுடையசேமாறி களாலுடையும்படிசெய்விக்கும்பொல்லாதவனுமலட்டுப்பசுவின்முதுகிற்பொதிக ளையெடுத்தும்- அறிவில்லாதவனுமிடபங்களிலேபொதிகளையெடுத்துமீனனும் எ - று (எ௩)

வருந்துமேபதம்வைப்பின்மரிக்குமே *
பொருந்துமண்ணிற்புழுக்களுமென்றுளம் *
வருந்தியேபதமெல்லெனவைத்திடா *
தருந்தவத்தைப்பிரிந்தவராக்கனும் *

எ - று யாவர்க்குமிடமாகப்பொருந்தும்பூமியிலடிவைக்குங்கால்புழுக்க ளும்- மெய்ம்புமுதலியனவும் - வருந்திமோமென்றுஞ்சாமென்றுநினைந்துமனநொ ந்தடியைமெத்தெனவையாதவரியகொல்லாதவிரதத்தைவிட்டவிராக்கதனுக்கொ ப்பானும் எ - று (எச)

உண்ணவூனைவிரும்பியுயிர்க்கொலை *
யெண்ணுவான்கொலைகண்டிருந்தான்கொலை *
பண்ணுவானைத்தடுத்துப்பகர்கிலா *
னண்ணுவானிவரோடெனுநால்வரும் *

எ - து வெளி (எரு)

மிக்கசாதியுட்டோன்றியும்வேசியர் *
துக்கந்துய்த்திடச்செய்யுந்துரிசனுந் *
தக்கதென்றுமதுமணஞ்சார்தருந் *
திக்கிறசிசெலுத்துஞ்சிறியனும் *

எ - து உத்தமமானநற்குலத்திற்பிறந்தமக்குலத்துக்கேற்பபாதுகாவாமற்

பிராமணரைத்துன்பமனுபவிக்கும்படிசெய்யும்போல் லாதவனுங்- கள்முதலிய நாற்றம்வருமீசாநிற்குந்திசையிலதனைநல்லதென்றுநாசியினுலுகந்துகொள் ளுமீனனும்- எ - று (எசு)

பாவஞ்செய்யப்பயமில்படிறனும்
பாவஞ்செய்யவிளைப்பிமிருறைதயும்
தேவர்தம்மைக்குறித்துத்திகழ்விதி
மேவயாகஞ்செய்யாத்தனவேந்தனும்

எ - று பாவஞ்செய்தற்குப்பயப்படாதவஞ்சகனும்- பிறர்க்குஅனவரதமும் பொல்லாப்புச்செய்தற்கிளையாதமூடனுங்- தேவர்களை நோக்கிய சுவமேதமுதலிய யாகங்களைவிளங்காநின்றவிதிமுறைபொருந்தச்செய்யாதமிகுந்ததிரவியத்தையுடைய- இராசாவும் எ - று

எவ்வம்- வயமெனத்திரிந்தது (எஎ)

ஆலயத்தையமலனுக்காகிக்குக்
கோயிலைமிலைக்கவிளாந்தண்ணறு
மாலைசூட்டவும்வல்லமுமல்லமுக்
காலமும்மெனபோவநுங்கல்லனும்

எ து யாம்நின்மலனுகியசிவனுக்குத்திருக்கோயிலைத் தான்கட்டினுமில் லையல்லது குளிர்மையுடைத்தாயமணம்பொருந்தியவில் லமாலைமுதலியவற்றைமு க்காலமுஞ்சிவனுடையதிருமுடியிலேசாத்தவுஞ்சமத் துடையமுமல்லமென்றுமன த்தின்கண்ணேறுவில்லாதகன்னெஞ்சனும் எ று [எஅ]

கூர்த்ததீயனங்கூடக்குறுகினர்க்
கார்த்தெதிர்ந்தரையாதவலனு
மூக்துளார்பிணிமுற்றினர்பற்றிலர்
பார்த்தபோதுபரிவில்படிறனும்

எ து மிகுந்தபசிபொருந்திவந்தணுகினோர்க்கெதிரேசென்றுநல்வார்த்தை சொல்லியழைத்து அன்னமிடாதபொல்லாதவனும், வயோதிகர்-வியாதியாளர்-மி டியரிவர்கள்தன்னைவந் துகண்டபோதாயினும்அவர்கண் மேலிரக்கமில் லாதபொ ல்லாதவனும் எ று [எகூ)

தன்னிற்றண்ணியனைவலைத்தக்கதென் *
றுன்னிச்செய்யுமறிவிலனானு *
மென்னொதசங்காக்குமெளியனுந் *
துன்னுமாயிடங்காக்குந்தொழிலனும் *

எ து தனக்குக்கீழானோனைவலோனல்லனென்றுகருதிச்செய்யுமறிவில்லாதகுற்றமுடையோனும் ஆடு எருமை யிவைகளைக்காத்தலால்வரும்பயனியாதென்றெண்ணாமல்மேய்க்குநொய்யவனும் எ று [௯௰]

அச்சமின்றியருவினைக்காடகத் *
திச்சையால்வருந்துன்பமுமெண்ணிடான் *
முச்சியேமரக்கோவைமுயற்சியாற் *
கச்சிடாதுகடற்செலுங்கல்லனும் *

எ து தனவாசையினாலேபொருட் கற்கரியபாவத்துக் கஞ்சாது ஆழ்கடலினடுவேகாற்றுமுதலியபொருந்திற்கப்பல்கவிழ்ந்துமரிப்போமென்னுந்துக்கமுமெண்ணாதுமுயற்சிமிகுதியாலேகப்பலைப்பண்ணியதன்கணேறுதலையெறுத் திடாமற்கடலோடுங்கன்னெஞ்சனும் எ று

மரத்தாற்கோத்தலினாலே மரக்கோவையெனக்கப்பற்கோர்காரணப்பெயராயிற்று [௯௧]

அகத்திற்பண்பறுத்தாடகத்தாசையான் *
முகத்திற்பண்ணைமுகிழ்த்தவித்துடன் *
சகத்திற்காளையர்தம்மைமயக்குவார்க் *
குகப்புச்செய்தவடோள்புணர்நனும் *

எ து உள்ளத்தின்கணன்பினையொழித்துப்பொருளாசையினான் முகத்திற்கண்மலர்ச்சியைத்தோற்றுவித்துஇராகவிதத்தினாலேபூமியின்கணிளைஞராயுள்ளோரைமோகிப்பிக்கும்வேசைகளுக்குச்சந்தோஷத்தைச்செய்தவர்கள் தோளிணையைக்கூடுந்திமையுடையோனும் எ று [௯௨]

தபதிகாருகன்கொல்லன்றனடனர்க் *
குபகரிப்பனென்றுரட்டினனான்வலி *
யபகரிக்கும்பிணியறுப்பானெனு *

மிவருங்கூலியருங்கபடெய்திடின் ❀

எ - து சிற்பாசாரியு, மீரங்கொல்லியுங், கொல்லனு, மிராசாக்களுக்குத்திரவியங்களையாதாயமாக்கிக்கொடுப்பனென்றிராசகாரியம்விசாரிக்கப்பொருந்திேனுனுஞ், சரீரபலத்தைக்கெடுக்கும்வியாதியைத்தீர்க்குமருத்துவனுங், கூலியாளருமாகவிவர்களறுவருந், தந்தஞ்செய்தொழில்களிலேவஞ்சகஞ்செய்வாராயினவர்களும் எ - று (அ௩)

வேலைதோறும்வினைசெயவேண்டியே ❀
கூலியென்றிரைமெய்க்குக்கொடுத்திடான் ❀
சாலவுண்ணுஞ்சபுக்கனுந்தாமத ❀
வேலைமூவைந்திற்பின்னுணும்வீணனும் ❀

எ - து காலந்தோறும்அதற்கேற்றசற்கன்மஞ்செய்யும்பொருட்டுத்தன்சரீரத்துக்குக்கூலியென்றுண்டியைக்கொடாமலுண்டிச்சுவைவிருப்பினாலேபுருஷாகாரத்துக்குமேல், மிகவுமுண்ணும்பொல்லாமனத்தையுடையோனு, மிராத்திரிகாலம்பதினைந்துநாளிகைக்குமேற்பொசிக்குமில்வாழ்வானாகியவவத்தனும் எ - று மூவைந்தென்று, அர்த்தயாமத்தைக்கருதுகையால், அர்த்தயாமம்பதினொன்றேகாலுக்குமேலெனச்சொல்லவும்படும், எனவே, ஒருசாமத்துக்குள்ளேபொசித்தல்சிறப்பெனவறிக (அச)

ஆறிலொன்றுகடமைகொள்ளாதகி ❀
னேறவேகொள்ளீடிறைவனு ❀
மூறுசெய்திடுவானுபலகினை ❀
வேறுவேறுதன்னேவல்விதத்தினும் ❀

எ - து ஆறிலொன்றுகடமைகொள்ளாமலதனிலதிகமாகக்கொள்ளுநன்மையில்லாதவரசனும், தன்னேவல்விதங்களினாலேசேனைகளாயுள்ளோரையும், அதிகாரிகளையுங்கள்வரையுங்கொண்டுதேசத்துக்குநாளுவிதமாகத்தீங்குசெய்விக்குங்கொடுங்கோன்மன்னனும் எ - று (அ௫)

இத்தகைத்தவிறைவனிருகிதி ❀

கைத்திடாதுகவரக்கருதிய *
சித்தமேவிடச்சென்றிரந்தேகொளும் *
பொய்த்தவம்புரிபூசுரன்றானுமே *

எ - து முற்கூறியவிந்தக்கொம்மைகளோர்டுகூடியகொடுங்கோன்மன்னன துதிரவியத்தைப்பார்காதென்றுவெருமலதனைவாங்கக்கருதுமாசைமிகுதியாலவன் பாற்சென்றிரப்புரைகூறிவாங்கும்பொய்த்தவத்தைச்செய்யாநின்றபிராமணனும் எ - று (அரு)

சோரன்றன்னைத்துயக்கமனத்திறற் *
சோரனன்றெனநீக்குந்துரிசனுஞ் *
சோரனல்லனைச்சூட்சிபிடிப்பிறற் *
சோரனென்றுதுணித்திடுந்துட்டனும் *

எ - து பூகமற்றம்ன்த்திறலேகள்ளனைக்கள்ளனல்லனென்றுவிடும்பொல்லாதவேந்தனு, மாராய்ந்துவிசாரியாத அறிவின் மையாற்கள்ளனல்லாதவனைக்கள்ள னென்றுக்கிலைபண்ணுங்கொடுங்கோன்மன்னனும் எ - று (அசு)

சோரனுக்குத்துணைச்செலுந்துட்டனுஞ் *
சோரவித்தைகள்சொல்லுந்துரிசனுஞ் *
சோரனைச்சோரனென்றறிந்துந்துனுஞ் *
சோரனுமவளைச்சுளியானுமே *

எ - து கள்ளன்திருடுமிடத்தவனுக்குத்துணைப்போனதீயோனு, மவனுக்கு க்களவுநூல்கலையுபதேசிக்கும்பொல்லாதவனுங், கள்ளனைக்கள்ளனென்றறிந்து மவனோடுகூட்டுச்செய்யுங்கள்ளனும், அவனைக்கண்டாலித்தொழில் நீசெய்யாதே யென்றுகோபியாதவனும் எ - று
சோரவித்தைகளாவன, மந்திரந்தெய்வமருந்தேநிமித்தந் தந்திரமிடனேகாலங் கருவியெனவெண் விதமாயிருக்கும்இதனைச் சிலப்பதிகாரமுதலிய நூல்களிற்கா ண்க (அஅ)

ஏந்திளந்தடங்கொங்கையைபின்புறங் *
காந்தனீங்கவக்காரிகைதோளிணை *

தோய்ந்தசோரனைத்தொட்டுத் துயர்செயா *
வேந்தனும்மனைச்சோரனில்வேறலன் *

எ – து ஆபரணங்கள் தாங்குமிளமைத்தன்மையுடையபெரியமுலையினையுடையாளைக்கூடிமனமகிழ்ச்சிபொருந்துங்கணவன்பிரிந்தகாலத்தந்தமனையாளுடையதோளிணையைப்புணர்ந்தகள்ளனைப்பிடித்துத்தண்டஞ்செய்யாதஅரசனும் பிறர்மனைச்செல்லுங்கள்ளனில்வேறாகானுதலாலந்தவிராசாவும் எ – று (அக)

பாலைநெய்யைப்பலத்தைத் நிலத்தினைச் *
சாலியாதியன் றாதியைத்தண் புனன் *
மூலமாதிமுதிரையிறுதியைச் *
சேலையோடுபட்டாடைதிருடனும் *

எ – து வெளி – மூலம் – கிழங்கு – முதிரை – துவரை (கய)

பரியகம்பளந்தன்னையும்பாசமும் *
வரியதூணும நதுவுந்தயிலமுங் *
திரணைமீறுசெயிந்தசில்பண்டமுங் *
கரமுறப்பற்றிக்கொண்டிடுங்கள்வனும் *

எ – து வெளி – பாசம்-கயிறு-வரியதூண்-ஆகாதெண்வளர்ந்ததூண் (கக)

சந்திரந்தனைப்பாதுகைதன்னையும் *
வித்தரித்திடும்பாயின்விதத்தையுங் *
கொத்துலாமலர்க்கூடையும்பேழையு *
மத்தமுட்டியெடுக்குமவலனும் *

எ – து வெளி – கொத்துலாமலர்க்கூடை – திருப்பூக்கூடை – அத்தங்கை (கஉ)

சங்கமாதிசலத்திற்சனித்தவும் *
வங்கமாதிமரத்தின்வகுத்தவு *
மங்கலத்தமழலைமுழவமு *
மங்கையாற்பற்றிக்கொள்ளுமவலனும் *

எ - து சங்குமுதலாக நீரின்கட்பிறந்தனவனைவுங், கப்பன்முதலாகமரத் திற்பண்ணியுள்ளனவு, மங்கலவாத்தியமானமழலைச்சொல்லையுடையமத்தளமு மானவிவைகளையுந், திருடுமவத்தனும் எ - று (௧௩)

ஈயந்தன்னையிரும்பினைச்செம்பினைத் ❋
தேயனுந்திரபுத்தனைச்செங்கலை ❋
மாயவார்க்கையர்தங்கண்மனையினு ❋
மேயுமேதுமெடுக்குமிழுதையும் ❋

எ - து — வெளி — தேயன் எ - து திருடன் - த்ரபு - எ - து - பித்தளை - இவைகள்வடமொழி (௧௪)

பிறர்பொருட்கடுகிற்பிளவாயினு ❋
மறையநின்றதனைக்கொளும்வஞ்சனு ❋
நிறையறக்கொளவெண்ணிடுநெஞ்சனு ❋
மறையுமாதனுமன்னியர்க்காகவே ❋

எ - து பிறர்க்குரியபொருள்களைக்கடுகிற்பாதியாயினுமவர்காணாவண்ணஞ் சென்றுதிருடுங்கள்ளனு, முத்தமமானநிறையென்னுங்குணநீங்கப்பிறர்பொருளை க்கைக்கொள்ளும்படிவிசாரிக்குமனத்தையுடையோனு, மொருவன்பொருளைப்பி றர்க்காம்வண்ணஞ்சொல்லுமறிவில்லாதோனும் எ - று (௧௫)

என்னுமித்தொகையாவருமிங்கியற் ❋
பன்னுபாவக்கடலிடைப்பட்டுளா ❋
ரின்னபேதத்துரிசுமியற்றிடிற் ❋
பின்னுவார்குழற்பேதையர்தாமுமே ❋

எ - து இங்ஙனஞ்சொல்லப்பட்டவிந்தப்பாவவிதத்தொகையிலுள்ளோரெ ல்லோருமிவ்விடத்திந்தவியலின்கண்விதித்தவுபபாதகத்திற்றண்ணியபாவமாகி யகடலின்கணமிழ்ந்தும்பாவிகளாவோர், பின்னற்றொழில்பொருந்தியநீண்டவள கத்தினையுடையமடவார்களுமுற்கூறியவிந்தப்பாவபேதங்களானதீமைகளைச்செ ய்வாராயினத்தன்மையுடையபாவிகளாவோர் எ - று

பாவக்கடலிடைப்பட்டுளார் எ து நடுநிலைத்தீபகம் (௧௬)

மேலுபபாதகமுதலிய கன்மங்களைச்செய்தோர்பெறும் பயனுணர்த்துகின்றார்.

ஈட்டுமிந்தவினைத்தொகையாவையு *
மீட்டிடும்படிவெய்யநமன்றமர் *
காட்டிடுந்துயராக்கைகலந்துபோய் *
வாட்டுமோதிரையத்துள்வதிவரே *

எ - து அதிபாதகர்முதலாயினோரிவ்வண்ணஞ்செய்யுமிந்தவதிபாதகமுதலிய கன்மபலங்களெல்லாவற்றையுமொழிக்கும்படிகொடியயமதூதர்களுண்டாக்குந் துன்பவுடலாகியயாதனாசரீரத்தையடைந்துசென்றுதுக்கத்தைக்கொடுக்குநரகத் தின்கணிருப்பர் எ - று (௧௭)

மானிடரேயன்றித்தீமைசெய்தவிலங்குபறவைகளு
நரகமடையுமென்பதுணர்த்துகின்றார்

மைந்தர்மாதருமற்றையலியுமோ *
பந்தபாசவிலங்கும்பறவையு *
நந்தவாக்கையிறுவெனமுன்னுறு *
மந்தவாக்கையடைந்தகன்றுழுமே *

எ - து ஆணைச்சாயுள்ளோர்பெண்ணைச்சாயுள்ளோரலியைச்சாயுள்ளோர்மா த்திரமோநரகத்தின்கணுழந்துவது, அவர்களையல்லாதபாசபந்தத்தையுடையமி ருகங்களும்பறவைகளுமுழந்தவுண்டானவுடம்புபோலெதிர்வருமந்தயாதனாசரீரங் களைப்பொருந்திப்பூமியின்கணெடுத்தவச்சின்னின்றுநீங்கிநரகத்தின்கணுழந்தும் எ - று (௧௮)

முற்கூறியஅதிபாதகமுதலியபாவபலங்களைக்கொ
டுப்பவன்யமனென்றுஞ்சிவபத்தர்கள்செய்தபாவ
பலங்களையாசாரியன்பிராயச்சித்தத்தாற்போக்கு
வனென்றுமுணர்த்துகின்றார்

விண்ணுளார்நரர்மற்றைவிலங்குமே *
பண்ணுபாவபலத்தைக்கொடுப்பவன் *
றிண்ணமேயமன்றேசிகன்றீர்த்திடும் *
பண்ணிற்பாவவிதஞ்சிவபத்தரும் *

எ - து தேவர்களு, மானிடரு, மிவர்களல்லாதமிருகங்களுந், செய்யுந்தீ

வினைப்பயனை யவைகளுக்குக்கொடுப்பவன் யமராசன், சிவபத்திகளைப் புள்ளோர்பா வபேதங்களைச்செய்வாராயின் அந்தப்பாவபலங்களையாசாரியன் பிராயச்சித்தசாஸ் த்களாலேபோக்குவனிதுநிச்சயம் எ - று
திண்ணமென்பதனையிருபாலுங்கூட்டுக (௧௧)

வெளியாகப்பாவஞ்செய்தஆன்மாக்களையிராசாந்
தண்டிப்பனவனுற்றண்டிக்கப்படாதோரையமனே
தண்டிக்கப்படுவனென்றுணர்த்துகின்றார்

பிணக்கந்தன்னையும்பெற்றவர்தம்மிடைக் ❋
கணக்கிலாரையுங்கள்வர்கடம்மையும் ❋
வணக்குவான்மன்னன்மற்றையர்தங்களை ❋
யிணக்குவானரகத்துளியமனே ❋

எ - து ஒருவர்க்கொருவர்வழக்கின்கண்மாறுபாட்டைப்பெற்றுவந்தவிடத் தழிவழக்குடையோரையுஞ்சோரர்முதலாயினோரையுந்தண்டித்துநிறுத்துமவன ரசனே, யவனுற்றண்டப்படாதோரையுமாசாரியராற்பிராயச்சித்தப்படாதோ ரையுநரகத்தின்கட்செலுத்தித்தண்டிப்போனியமதருமராசன் எ - று (௩)

இந்தபாவங்கள்தீர்த்துக்கோடற்குப்பரிகாரஞ்செ
ய்துகொள்ளுமாறுணர்த்துகின்றார்

ஆதலாற்செய்ததீங்கையறுத்திட ❋
வேதமாதிவிதியும்விளங்கிய ❋
போதகன்பதம்போற்றவவன்செயும் ❋
வாதியாதபிரத்தியவாயமே ❋

எ - து தீவினைசெய்தோர்க்குநரகமும்அந்தநரகத்தின்கட்செலுத்துமொரு இயமதருமராசனுமுண்டாகையினாலே, யான்மாக்கள்தாந்தாஞ்செய்தபாவங்க ளையொழிப்பதுபொருட்டாகவேதமுதலியநூல்களிற்சொன்னவிதிகளையுமறிந்த வாசாரியனதுதிருவடியைவணங்குவாராயிலாசாரியனும்அந்தவான்மாக்களைத்தீவி னைகள்வருத்தாமைக்குக்காரணமானபரிகாரத்தைச்செய்துதீர்ப்பன் எ - று (௪

மேன்முடிந்ததுமுடித்துணர்த்துகின்றார்

வேறு

அதிபாதகமுமதிற்பிறிவுமவலமகபாதகமைந்துங் *
கதிமகபாதகந்தன் னிற்கனிட்டமானபாதகமு *
மதனிற்றணியவதற்கணியவுபபாதகமு மதற்கணிய *
வதனிற்றணியபலபாவவிதமுந்தொகைசெய்தனைநதாமே *

எ-து அதிபாதகமுமந்த அதிபாதகபேதமுந்துன்பத்தைவிளைக்கும்பஞ்ச மாபாதகமுஞ்சொல்லப்பட்டவந்தப்பஞ்சமகாபாதகத்திற்றண்ணிமையானபாதகமுமந்தப்பாதகத்திற்றண்ணிமையுடையவாயதற்கடுத்த தவுபபாதகமுமந்தவுபபாதகத்துக்கடுத்திருப்பனவாயதனினுந்தண்ணிதானநானாவிதமானபாவபேதங்களையு மிவ்வியலின்கட்டொகுத்துச்சொன்னோமிதனைமுனிவனேயறிவாயாக எ-று கதிதம், வடமொழி (௧௨)

வேறு

என்றுசிவநிந்தையெழுவாய்வினையிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றபுலனையுங்கிளையும்வெய்யவினையைய *
நின்றமுனியன்றுரைநிற்குணனினைந்தே *

எ-து வெளி (௧௩)

சிவத்துதியுணர்த்துகின்றார். வேறு

கன்றியகாலனைக்காய்ந்தவனைகருவினைப்போக்கிருக்காய்ந்தவனை *
வென்றிவில்வேடனைவிட்டினனைவிரும்படியார்க்கருள்விட்டினனை *
யன்றிருவர்க்கரிதாயவனையண்டமுமாக்கியதாயவனை *
யொன்றியவெங்கணுமுற்றவனையுணர்ந்தனுன்னையுமுற்றவனை *

எ-து மார்க்கண்டனைக்கோபித்து வந்தஇயமனைச் சங்கரித்தோனே; ஆன்மாக்களுடையஅஞ்ஞானத்தைநீக்கும்வேதத்தை முனிவரறியும்வண்ணஞ்சொன்னோனே; வெற்றிபொருந்தியகருப்புவில்லினையுடையவேளானகாமனைக்கொன்றோனே தன்னைவிரும்புமடியார்களுக்குக்கொடுக்கு முத்தியையுடையோனே; அடியுமுடியுந் தேடியகாலத்தரிபிரமரிருவர்க்குங் காணுதற்கரிதாய் நின்றோனே; யண்டங்களையுண்டாக்கியவுலகமாதாவானோனே, யெப்பொருளுந்தானேயாகியென்னுஞ்சொல்லும் வண்ணமெவ்விடத்தும் வியாத்தியினாலே வேறறப்பொருந்தி நின்றோனே; யெவரொவரிருவினைசெய்யக்கருதின நினைவையுமுயிர்க்குயிராயிருந்தவரவர் நினைக்குமுன்

னையறிந்தோனைதவத்தோனே எ - று

அண்டமுமென்னுமும்மை பிண்டமுமெனவெச்சத்தின்கண்வந்தது [௱௪]

இதுவுமது

இடுபலிகொண்டுணியென்பவனேயிருவினைதீர்த்திடுமென்பவனே ※
நடநவிலுந்தொழிலல்லவனேநாசமுமாமயனல்லவனே ※
மடலவிழ்கொன்றையமாலையனேவந்தனையாஞ்செயுமாலயனே ※
படிதனிற்காசிப்பதியவனேபல்லுயிர்க்கெல்லாம்பதியவனே ※

எ - து இருடிகள்மாதரில்லந்தோறுமிடாநின்றபலியினைப்பெற்றுண்போனென்றியாவருஞ்சொல்லப்படுவோனே, நல்வினைதீவினையிரண்டினையுநீக்குமென்னுடையவிறைவனே, பஞ்சகிருத்தியமாகியநிருத்தம்பயிலுநற்றொழிலையுடையோனே, பிறப்பிறப்பினையடையும்பிரமாவல்லாதோனே; யிதழ்விரியநின்றகொன்றைமாலையையுடையோனே, யாம்ஆராதனைசெய்யுந்திருக்கோயிலின்கணுள்ளோனே, பூமியின்கட்பொருந்தியகாசிப்பதியையுடையோனே, பலவாகியவான்மாக்களுக்கெல்லாங்கருத்தாவாயுள்ளோனே எ - று (௱௫)

குமரத்துதியுணர்த்துகின்றார்

வேறு

பூதிபூடணன்வேதபாடணன்பூளைசூடினன்காளியூடின ※
னாதிநாயகன்பேதைநாயகனுமைபூணினன்வாய்மைபேசினன் ※
போதன்மாதவனாடினேடவும்பூணவேணயங்காணொணாதவரன் ※
காதன்மாமகனாறுமாமுகன்காசில்வாசகம்பேசுவாமரோ ※

எ - து திருநீற்றையேயாபரணமாகத்தரிப்போனுமாய்வேதத்தையருளிச்செய்வோனுமாய்ப், பூளைமலரைத்திருச்சடையிலேசூடுவோனுமாய்க்; காளியுடனே வாதுசெய்வோனுமா, யாதிகருத்தாவுமா, யுமைக்குக்கணவனுமா; யாமையோட்டையாபரணமாகவணிந்தோனுமாய், வேதாகமங்களைப்பாதுகாப்போனுமாய்த், தாமரைமலரின்கணுறையும்பிரமாவுந், திருமாலுந், தம்முண்மாறுகொண்டுதேடவுமவர்கள், கண்ணிற்பொருந்தும்வண்ணமிலமைபொருந்தியதன்மையைக்காணவொண்ணாதவனுமாயிருக்கிறசிவனுடைய குமாரனை ஆறுமுகக்கடவுளினதுகுற்றமற்றதிருவாக்கைப்புகழாநின்றோம், எ - று (௱௬)

அறைந்தவதிபாதகமாதி யடைந்தாரியமனுலகதனைச் ※
செறிந்துசிவந்தவிழிகண்டு சித்தங்கலங்கிச்செயலழிந்து ※
பிறிந்துபுணர்ந்துபிலவழியை ப்பிடித்துத்தூதராடிக்கெறிய ※
மறிந்துநிரயக்குழிவீழ்ந்து வருந்தும்விதத்தைவகுப்பதன்முன் (௧)

அறிகமுனிவவறம்புரிந்தா ரவருமியமனுலகதனை ※
நெறியிற்றருமபலநிகழ நீடுமகிழ்ச்சிகூடியிடச் ※
செறியுமுறையுமவர்க்கவனுஞ் செய்யுஞ்சிறப்புந்துறக்கத்தி ※
னுறையுமுறையுந்தொகைசெய்தே யுரைப்பாமுனகமுவப்புறவே ※

இவையிரண்டுமொருதொடர், முன்னேயியலிற்கூறிய அதிபாதகமுதலியபாவபேதங்களைச்செய்தோர் யமலோகத்திற் சென்றியமதன்மராசனது கோபத்தாலேசிவந்தகண்ணினைக்கண்டுமனங்கலங்கிச்செயலற்றுச்சுவர்க்கத்துக்குப்போம்வழியைவிட்டு நரகத்துக்குப்போம்பெலத்துவாரத்தையடைந்து தம்மைப்பிடித்துக்கொண்டுசெல்லும் யமதூதர்களடித்தெற்றியதலைகீழாய் நரகக்குழியின்கண்விழுந்துவருந்தும்விதங்களை வகுத்துச்சொல்வதுக்கு முன்னேபுண்ணியங்களைச்செய்தோர்களுமியமலோகத்தின் கண் முறையானே புண்ணியபலன்கள்வந்துபொருந்துகையினாலேநிலைபெற்றமனமகிழ்ச்சியுண்டாகச்சென்றடையுமுறைமையுமவர்களுக்கந்த யமதன்மராசன் செய்யுஞ்சற்காரத்தையு மவர்கள் சுவர்க்கத்தின்கணிருக்குமுறைமையையுந்தொகுத்துலகத்துக்கு மேன்மையுண்டாகச்சொல்லாநின்றோம் அதனைமலையமுனிவனேயறிபக்கடவை என்று (௨)

ஆக்கைநிலையில்லாமையுணர்த்துகின்றார்

முளைத்தகருவுமழவுருவு முதிராவுருவுமுதிர்ந்தமையா ※
விளைத்தவடிவுமெனுமிவற்றி னிருந்தவுயிர்கள்விளையிறாலும் ※
வளைத்ததூதர்வதைசெய்ய மற்றோருடலம்பற்றிமுனம் ※
விளைத்தசெய்திப்பலம்விளைய வியமபுரியைவிரவிடுமே ※

என்றது கெற்பகோளகையின் கட்பதிந்த கெற்பமும்பாலகவடிவமும் முதிராததருணவடிவமுமுப்படைந்த தன்மையினாலேமெலிந்த விருத்தவடிவமுமானவிந்தச்சரீரங்களிற்பொருந்திய வான்மாக்களூழ்வினை தொலைந்தவளவில் வந்துசூழ்ந்தியமதூதர்கள்வதைக்கவிந்தப்பூதவுசரீரத்தைவிட்டு யாதனாசரீரத்தையடைந்து அவ்விடத்தின்முன்னாட்செய்த கன்மபலம்பொருந்தா நிற்பவதுவனுபவித்தற்பொருட்டியமலோகத்தையடைவர்கள் என்று (௩)

மேனிறுத்துமுறையானேயறம்புரிந்தோர் யமலோகத்தையடையுமுறைமையுணர்த்தவான்றொடங்கியதனுட்பாதுகை யுதவினோரடையுமுறைமையுணர்த்துகின்றார் வேறு

பாதுகையுதவினர் பனைவருமுறவே *
வாதமுமனபரி வரவழியுகையா *
வேதியதுவெளவ வெளிதுறவெளையும் *
போதகரிவரொன யமபுரிபுகுவார் *

என்றது அந்தணர்பெறும்படிசெருப்பு மரவடியிவைகளைக் கொடுத்தோர், வேகத்திற்செல்லாயுவையொத்தகுதிரை வழியின்கண்வந்து பொருந்த வதன்கணேறிடத்திவர்க்கரியபொருள்யாதென்றுசொல்லும் வண்ணமெய்ப்பொருளுங்கைவந்து பொருந்த யறிவுடையோரிவரொன்று சொல்லும்வண்ணம் யமலோகத்தை யடைவர் என்றது (௪)

குடைதானம்பண்ணினோரடையும்பலமுணர்த்துகின்றார்

சத்திரமுதவினர் தகைமையர்பெறவே *
மொய்த்தெழுமுகிலிழல் வழியுறமுறையா *
லெத்தொகையரியன வகையொளிதுறவே *
சித்தமுமகிழ்வுற யமபுரிசெறிவார் *

என்றது வெளி இதனுள் சத்திரம் குடை (௫)

வத்திரதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பட்டினையுதவினர் பனைவருமுறவே *
தொட்டிடவினியன துகில்புனைவடிவுட *
னிட்டமதுறுபயன் வழியெளிதுறவே *
சிட்டருமிவரொன யமபுரிசெறிவார் *

என்றது வெளி இதனுள் சிட்டர் பெரியோர் [௬]

மெத்தைதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

தவிசினையுதவினர் தகைமையர்பெறவே *
புவிதனிலரியது பொருவினையொரியது *

சிவிகையு முறவதன் மிசைவழி திகழ்வா ✻
ரிவர்மிகு தவனொன யமபுரியிசைவார் ✻

எ - று. வெளி. இதனுள் தவிசு மெத்தை சிவிகை பல்லக்கு. [எ]

அசுவதானம்பண்ணினோரடையுமுறைமைபுணர்த்துகின்றார்

தத்துறுபரியினை யுதவியதகைமைய ✻
ரத்தருபரிமிசை யழகுறவழியே ✻
மெய்த்தொகையினியன வளைவெளிதுறவே ✻
சித்தருமிவனொன யமபுரிசெறிவார் ✻

எ - று. வெளி. இதனுள் சித்தர், சித்தியையுடையோர். (அ)

கட்டில்தானம்பண்ணினோரடையுமுறைமைபுணர்த்துகின்றார்

கட்டுவைபதனையு முதவினர்களிறை ✻
ரிட்டமதுறமதெனவழியிடையே ✻
கிட்டியவதமொடு கெழுமியவழகாற் ✻
சிட்டருமிவனொன யமபுரிசெறிவார் ✻

எ - று. வெளி. இதனுள் கட்டுவை, கட்டில். (௯)

சாலைதோப்புவைத்தோரடையுமுறைமைபுணர்த்துகின்றார்

பொழிலினைநிறுவிய பொருவருபுகழினர் ✻
நிழலுறுபொழில்வழி நிறைமலருறவே ✻
விழைவினிலினியன வெவையவைமிகவே ✻
யழகியரிவனொன யமபுரியடைவார் ✻

எ - று. வெளி. இதனுள் பொருவரு ஒப்பில்லாதது விழைவு விருப்பு. [௰]

திருநந்தவனம் வைத்தோரடையுமுறைமைபுணர்த்துகின்றார்

பூமலிபொழிலினை நிறுவியபுகழினர் ✻
தேமலிரதமுறு முறவணிசெறிவா ✻
ரேமமுமிசைவர்கள் வழியிடையெளிதே ✻
காமலிபுகழொடு நடுவனையடைவார் ✻

எ து வெளி இதனுள் வில்லி, காமராசன் உமை, இடம் (௰௪)

கோதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

கோவினையுதவினர் குலமறையவர்கைப் *
பூவணிவிரதமு முறவது புகுவார் *
ஓவியமணமட வாரவியருடனே *
தேவருமிவரென யமபுரிசெறிவார் *

எ து வெளி இதனுள் அணி அழகு (௰௫)

அன்னதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அன்னமுமுதவின ரருமறையவர்பாற் *
றன்னிகரில்லன முறவழிதனினும் *
பன்னியவவைதனை யுணுபுரைபயிலா *
நன்னயரிவரென நடுவினையடைவார் *

எ து வெளி அன்னத்தை யனமென இடைக்குறை யாக்கினார் பன்னியது சொல்லியது நன்னயர் நல்லறிவினையுடையோர் (௰௬)

வியாதியாளர்க்கவுடததானஞ்செய்தோ ரடையுமுறைமையுணர்த்துகின்றார்

உதவினரவுடத முறுபிணியினர்கைத் *
திதமுறுமுருவமு முறவழிசெறிவார் *
இதவிதமெவையவை யெளிமையினுறவே *
மதனனுமிவரென யமனுறைமகிழ்வார் *

எ து வெளி இதம் நிலை (௰௭)

குருபணிவிடைசெய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

குரவனபணிபுரி குணமுடையவர்முன் *
மருமலரிரதமும் வரவழியெதிரே *
இரமுறவதனமர் தெரிவையருடனே *
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் *

எ து வெளி இரமுற நிலைபெற [௰௮]

பசிக்குநிகர்க்கொடியதும், அந்தவன்னத்தைப்பொசித்தோருக்குக்கணத்திலேதானே பசித்துயராகியதைப்போக்குமஃதன்றிச்சுகத்தையும்விளைக்குஞ்சரீரத்துண்டாயபெலமும்ஒளியுமாதலாலந்தவன்னமேயொப்பிலாதபொருளுமாமாகையினாலேயிதற் குவமையாம்பொருளிப்பூமியின்கண்மாத்திரமோவெவ்வுலகத்திலுமில்லை-று (௨௬

அன்னமே சரீரமெடுத்தற்குக்காரணமாமென்பதூஉ மன்னமேபடைத்தளித்தழிக்குமென்பதூஉமுணர்த்துகின்றார்

அன்னமதனிலே யுதிர மதனாற்றசையாமதனாலே ❋
மன்னுமதனிற் சுக்கிலமு மதனாற்கருவாகு ❋
பன்னரியவிவ்வுயிர்வாழு மாக்கைவிளையவழிந்தகறு ❋
மன்னமதுவேயுடற்றன்னை யாக்குநிறுத்துமழித்திடுமே ❋

எ - று அன்னத்திலேநின்றுமிரத்தமுண்டா, மந்தவிரத்தத்திலேதசையுண்டா மந்தத்தசையிலேயுமூக்காகிய சுக்கிலநிலைபெறு, மந்தச்சுக்கிலத்திலேகெற்பந்திரிந்துச்சரீரமுண்டா, முன்னோர்க்குறியவற்றிற்கெல்லாம் பரம்பரையிலேகாரணமாயிருந்து, மன்னமில்லையாயினுயிரிருந்துவாழுமுடம்புசத்தியிலேயழிந்துபோம், ஆகையினாலேயவ்வன்னமே யுடலினையுண்டாக்கு, மஃதன்றித்தானேயுணவாயின்றநுவுடலினைக்காக்கு, மதுவில்லையாயினந்தவுடலினையழிக்கும். எ - று (௨௭

பசிநோயுற்றோர்க்கந்நோயன்னத்தினாலன்றிப் பிறிதொன்றினாலுந்தீராதென் பதூஉம் யாவர்க்குமன்னமே யாதாரமென்பதூஉமுணர்த்துகின்றார்

உற்றுண்பசியைக்கனகத்தா லொளிசேர்மணியா லொண்டொடியாண் ❋
மற்றுமுளசெல்வனைத்தானு மாற்றவலசே வலன்வாயினாட் ❋
கெற்பந்தனக்கும்பாலனுக்குங் கிளர்ந்ததருணன்றனக்குமுட ❋
லொற்கமுடையவிருத்தனுக்கு முண்டோவிலையோதனமொழித்தே ❋

எ - று - வெளி - ஒற்கம் - மெலிவு - (௨௮)

முற்கூறியமானிடரேயன்றித் தேவர் முதலியோர்விரும்புவதுமன்னமே யென்பதூஉமதுவேபசிநோய்க்குமருந்தென்பதூஉமுணர்த்துகின்றார்

தேவர்முனிவர்தானவருந் திளைப்பருணவைத்தினிவிரும்பி ※
யாவருணவைவிரும்பாதா ரிடர்சேருடலுண்முந்நூற்றெட் ※
டோவாநோயுண்டவற்றுள்ளும்பசிநோய் கொடியதாதினதனுக் ※
காவாவென்றேயருளாளனருத்து மருந்தோதனமன்றே ※

எ - து. தேவர்களு மிருடிகளு மசுரர்களுந் தங்கள் தங்கள் சரீரமழியாமனிற்றலைவேண்டியன்னமாகியவுணவினையருந்துவார்கள், ஆகையினாலேயுலகத்தின்கண்ணவர்தாமன்னத்தைவிரும்பாமல்விட்டோ, ரஃதுமன்றித்துக்கத்துக்குக்காரணமாய்ப்பொருந்தியவுடம்பின்கட்டொடர்ச்சிவிடாத முந்நூற்றெட்டு வியாதியுளதாம்அதனுள்ளும்பசிநோயேமிகவும்பொல்லாதது, அப்பசிநோயையாதொருவர் பொருந்தின்அருளினையுடையோராந்தோவந்தோவென்றிரங்கி யதற்குக்கொடுக்குமருந்தாவதுமர்தவன்னமே. எ - று அன்றென்கிளவியாமென்றும் (௨௧)

மேலன்னதானஞ் செய்வோரேபிராணதானஞ்செய்வோராமென்றுணர்த்துகின்றார்

உற்றபசிநோய்க்கனமருந்தை யுதவுவாருமிலராகி ※
லற்றதுயிருமவ்வுடலு க்கன்னமளிப்பாரவருண்டேற் ※
பெற்றதுயிருமவ்வுடலம் பெறுமவ்வுயிருந்தருமாதி ※
சொற்றையீவானுயிரீவான் றருமமுதலுந்துயக்கறவே ※

எ - து. யாதாமொருவர்கொண்டபசிநோய்க்கன்னமாகிய மருந்தினைக்கொடுக்குந்தாதாக்களுமில்லையாயில் அந்தவுடலுக்குயிருமில்லையாய்விடும், அன்னதானஞ் செய்வோருளராயிற் பசிநோய்நீங்கியந்தவுடம்புஉயிரைப்பெற்று வாழும். மற்றவுயிருமறமுதலியநான்கையுஞ் செய்யப்பெறுமாகையினாலே யன்னதானஞ்செய்வோன்பிராணதானஞ் செய்வோனும், அதுவேயன்றிவிபரீதமறவறம்பொருளின்பவீடென்னுநான்கினையுந்தானஞ்செய்தோனுமாம். எ - து

சோறு - சொற்றையெனக்குறுகிற்று, ஈவானென்பதனைத்தருமமுதலுமென்பதனோடுங்கூட்டுக. (௩௰)

அன்னதானஞ்செய்வோரிம்மைமறுமைப்பயன்களை யடைவரென்பதூஉந்தபோதனர்க்கன்னதானஞ்செய்வோர் தவப்பயன்பேர்பாதியாகிற்பதென்பதூஉமுணர்த்துகின்றார்

பொன்னைமணியைப்புனையிழையை மற்றும்விரும்பும்பொருளினையு *
மன்னமளிப்பாரிங்கடைவ ரங்குந்தாம்வேண்டியவடைவ *
ரன்னமதனையருந்தவரை யருத்தினோர்களவர்பலத்திற் *
றுன்றுவார்களொருபாதி யவர்தாமொருபாற்றுன்னுவரோ *

எ - று அன்னதானஞ்செய்வோரிவ்வுலகத்தின் கண்ணேதானே பொன்னையும் ரத்னங்களையுமணியாநின்றுமாபரணங்களையுடைய மாதரையுமற்றுந்தாம் வேண்டியபதார்த்தங்களையும்பெறுவர், அந்தத்தேவலோகத்தின்கண்ணுந் தாம்வேண்டிய போகங்களைப்பெறுவர் அரியதபோதனர்களை யன்னத்தைப்போசிப்பித்தோர்கள் அவர்செய்ததபோபலத்திலொருபாதிபெறுவர்கள், அந்தத்தபோதனர்கள் மற்றவொருபாதியைபெறுவார்கள். எ - று (௯௧

சரீரத்துக்குமதனாற்செய்யுமறமுதலியவற்றிற்கு மன்னமேமேலானகாரணமென்றுணர்த்துகின்றார்

அன்னமாக்கைதனையாக்கு மதனாலறமுன்னுளவாகு *
மன்னமதனாலனைத்தினுக்கு மதிககாரணமதனாலே *
யன்னமதனுக்கொப்பான காரணமில்லையாயுங்கா *
லன்னையாளகாரணமும் புதல்வர்க்குளதோவாகமிடத்தே *

எ - து அன்னஞ்சரீரத்தையுண்டாக்கு மந்தச்சரீரத்தினாலே யறமுதலியநான்குமுண்டாமதனாலெவற்றிற்கு மந்தவன்னந்தானே மேலானகாரண மாகையினாலேவிசாரிக்குமிடத்தன்னத்துக்கு நிகரானகாரணமொன்றுமில்லை, யஃதெங்ஙனமென்னிற்பூமியின்கட்பிள்ளைகளுக்கு மாதாவுக்குநிகரானகாரணமுமுளதோவாதலாற்சரீரமுண்டாவதற்கன்னமுமாதாவுமே முதற்காரணம். எ - று

காரணங் - கரணமெனக்குறுகிற்று (௯௨)

அன்னமேசிருட்டிமுதலியகாரியகருத்தாக்கண் மூவருமாமெனவுணர்த்துகின்றார்

அன்னமதனையுலகனைத்து மாக்குமயனென்றறையுமறை *
மன்னுமுலகந்தனைக்காக்கு மாயனெனவும்மதித்துரைக்குஞ் *
சொன்னவுலகமனைத்தினையுந் துடைக்குமரனுமெனச்சொல்லு *
மின்னமுறையாலெவற்றினுக்கு மிஃதேமுதலென்றெண்ணுகவே *

ஏ - து - வெளி - இதனுள் - முதல் - காரணம் (௩௩)

உதகத்துக்கெய்தியதோர்சிறப்புவிதியு மன்றேனுதகமிரண்டையுந்தானஞ்
செய்தலேயதிகபலன்களைத்தருமென்பதுமுணர்த்துகின்றார்

உதகமதனையுயிரெல்லா முண்ணவிரும்புமதனாலே *
யுதகந்தனக்குமொப்பானபொருள் வேறில்லையுலகத்து *
முதகமன்னமெனுமிரண்டு முயிரையோம்புமதனாலே *
யுதகமன்னமெனுமிரண்டு மீதலிற்பரமபலமுளதே *

ஏ - து — வெளி ஓம்புதல் - காத்தல் (௩௪)

இங்ஙனஞ்சிறப்பித்தவன்னதானமுதலாகியவிசேட
தானங்களொடுமற்றுமுள்ளதானமுஞ்செய்தோர்,
யமலோகத்தினையடைந்துபின்னர்ச்சுவர்க்கத்தைய
டைவரென்பதுணர்த்துகின்றார்

அன்னமுதகமாவசுவமாடைகுடைகட்டிலையயினை *
மென்றுமிவைகளிருநான்கு மீயிற்பிதாபதியிரங்குந் *
சொன்னபடியேமற் றுமுளதானம்புரிவார்துயரகலத் *
துன்னுவார்களியமபுரியதன்பின் னடைவார்துறக்கமே *

ஏ - து அன்னமுந்-தண்ணீரும்-யானையுங்-குதிரையுந்துகிலுங், குடையும்-படுக்கைக்கட்டிலும்- புலித்தோன்முதலியவாதனமு மென்றுமிந்தவெட்டுவிசேட தானங்களையுஞ்செய்வார் யமதன்மராசன், அநுக்கிரகத்தைப்பண்ணும்படிசெல்வர்கள், என்றுரைத்தபடிமற்றுமுள்ளதானங்களையுஞ்செய்வோர்தமதுதுக்கமெல்லாம்விட்டுநீங்கயமலோகத்தையடைவர்கள், அதற்குப்பின்பங்ஙனங்கூறியவிருவிததானஞ்செய்தோருமவனேவலினாற்சுவர்க்கலோகத்தையுமடைவர்கள் எ-று (௩௫)

மேலிருத்தமுறையானேயறம்புரிந்தோர்க்கியமதன்ம
ராசன்செய்யுஞ்சிறப்பைமூன்றுசெய்யுளாற்குளகமா
கவுணர்த்துகின்றார்

வேறு

தருமநீதியர்கடருமராசபுரியுடையவேதருமராசனும் *
விரையவேயவரையெதிர்கொளாவரவுவினவியேகருணைவிழைவினொ *
லரியவாதனமுமருளியேயுதகவிதியுமாதிநடுவெந்தமு *
மொருமையோடவர்தமுளமுமோகையுறவுதவியேமதுரவுரையுமே *

ய்திருவுலவுநரகபூமியாய்விடுமென்பதுபற் றியேநமேவினைமபற்றுமே யெனவி றுப்படுத்தினார் (௧௯)

இங்ஙனம்புண்ணியஞ்செய்தோர்களையும்பயனைக்கூறிமேற்பா
வஞ்செய்தோர்களையும்பயனுணர்த்துகின்றார்

வேறு

புண்ணியபலங்கடன்னைப்புகன்றனம்பவிற்பாவம் ※
பண்ணினர்பலருஞ்சொல்வாம்பருப்பதமுனிவகேளாய் ※
திண்ணியர்பாவபேதந்திரிந்தவர்சிவனுமுண்டென் ※
றெண்ணியரச்சமெய்தக்கேட்டிடும்போதாவென்றாம் ※

எ - று வாராய்பொதியமாமலையின் கண்ணிருக்குமுனிவனே யிங்ஙனம்புண்ணியஞ்செய்தோர்களெய்தும் பலன்களைச்சொன்னோம். மேலிந்தப்பூமியின்கட்பாவஞ்செய்தோர்களெய்துந்தம்பயனையும் திடசித்தராய்ப்பாவபேதங்களையுநீங்கச்செய்யு முண்டென்று கருதினோர்கேட்டால் காலமெய்வன்றி பெய்யாமற்பயமுமச்சமெய்தும் வண்ணஞ்சொல்லாநின்றோமதனைநீகேட்பாயாக எ - று

ஓகாரம் பிரிநிலைக்கண்வந்தது (௨௦)

பாவான்மாக்களெல்லாம் யமலோகத்தையடையுமுறைமைக்கோர்பொ
துவிதியுணர்த்துகின்றார்

கருவினுள்ளுயிருமற்றைக் காயபேதங்கடம்மின் ※
மருவியவுயிருந்தொல்லை வல்வினைமாயவச்சம் ※
பெருகிடமோகந்துன்பம் பிறந்துடற்பிரியும்போதிற் ※
றருமுடற்றாங்கித்தூதர் செலுத்திடயமனிற்சாரும் ※

எ - று கெர்ப்பத்தின்கண்ணிருக்குமுயிரும் அதல்லாமன் மிருகபேதங்கண்முதலியயோனிபேதங்களிலிருக்குமான்மாக்களு முன்னுள்ளபிராரத்தகன்மந்தொலைந்தவாறேபயமுமோகமுந்துயரமு மேலிடாநிற்ப வெடுத்தவுடலினின்றுநீங்கியங்ஙனநீங்குங்காலத்திலேயுண்டாம் யாதனாசரீரத்தையெடுத்துயமதூதர்கள்செலுத்தயமலோகத்தையடையும் எ - று - அச்சம் - யமதூதராலெய்துந்துக்கம் மோகம் - புத்திரமித்திராதிகளைவிட்டுப்போகிறோமேயென்றெண்ணுமாசை - துன்பம் - மரணவேதனை (௨௧)

